Bibliographic Record Target

*ஸ்ரீராமாநுஜன். -- முதல் தொகுதி, முதல் பகுதி ([Aug./Sept. 1948]*
*சர்வதாரி, ஆவணி)- . -- மதராஸ் : ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபை, 1948-*
*v., plates : ill. ; 24 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்*
*Record No. 2446*

*Śrīrāmāṉujaṉ. -- Mutal tokuti, mutal pakuti ([Aug./Sept. 1948]*
*Sarvatāri, Āvaṇi)- . -- Matarās : Satkranta Prakācana Sapai, 1948-*
*v., plates : ill. ; 24 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: Śrīkāñcī Pirativātipayaṅkaram Aṇṇaṅkarācāriyar*
*Record No. 2446*

35 mm microfilm

**Image placement:** IA (IIA) IB IIB

Date filming began: 17 March, 2009

# List of issues filmed

## ஸ்ரீராமானுஜன்

முதல் தொகுதி, 8-வது பகுதி (Apr. 10, 1949)
முதல் தொகுதி, 9-வது பகுதி (May 10, 1949)
முதல் தொகுதி, 10-வது பகுதி (June 10, 1949)
முதல் தொகுதி, 11-வது பகுதி (July 10, 1949)
முதல் தொகுதி, 12-வது பகுதி (Aug. 10, 1949)
விசேஷ வெளியீடு (Sept. 10, 1949)
[ஸம் 2, இதழ் 1] (Oct. 10, 1949)
[ஸம் 2, இதழ் 2] (Nov. 10, 1949)
[ஸம் 2, இதழ் 3] (Dec. 10, 1949)
[ஸம் 2, இதழ் 4] (Jan. 10, 1950)
[ஸம் 2, இதழ் 5] (Feb. 10, 1950)
[ஸம் 2, இதழ் 6] (Mar. 10, 1950)
[ஸம் 2, இதழ் 7] (Apr. 10, 1950)
[ஸம் 2, இதழ் 8] (May 10, 1950)
[ஸம் 2, இதழ் 9] (June 10, 1950)
[ஸம் 2, இதழ் 10] (July 10, 1950)
[ஸம் 2, இதழ் 11] (Aug. 10, 1950)

*Continued ...*

ஸம் 2, இதழ் 12 (Sept. 10, 1950)
ஸம் 3, இதழ் 1 (Oct. 10, 1950)
ஸம் 3, இதழ் 2 (Dec. 10, 1950)
ஸம் 3, இதழ் 5 (Feb. 20, 1951)
ஸம் 3, இதழ் 7 (Apr. 1951)
ஸம் 3, இதழ் 8 (May 1951)
ஸம் 3, இதழ் 10 (July 1951)
ஸம் 3, இதழ் 12 (Sept.1951)
தனி மலர் - 2 (Nov. 1951)
[தனி மலர் - 3] (Dec. 10, 1951)
ஸம் 4, இதழ் 1 (Jan. 1952)
ஸம் 4, இதழ் 1 [i.e. 2] (Feb. 1952)
[Supplement] (Mar. 1952)
ஸம் 4, இதழ் 3 (Apr. 1952)
[ஸம் 4, இதழ் 4] (நந்தன, சித்திரை [Apr. / May 1952])
ஸம் 4, இதழ் 5 (May 1952)
ஸம் 4, இதழ் 6 (June 1952)

Śrīrāmānujaṉ

Mutal tokuti, 8-vatu pakuti

April 10, 1949

Record no. 2446






வருடச் சந்தா — போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள் இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்தும் மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 8 —

வருத்தும் புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி * ஒன்றத்
திரித்தன் றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும் பரமன் * இராமாநுசனெம் மிறையவனே.



மதராஸ்

ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P.B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

10—4—1949

## மதருஸ் ஸ்த்-க்ரந்த-பிரகாசந சபா.

1. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு உபகாரகமான எல்லா க்ரந்தங்களையும் தமிழ், தெலுங்கு லிபிகளில் அச்சிட்டு வெளியிடுவதற்கென்றே இந்த ஸபை அமைக்கப் பட்டிருக்கிறது.

(a) சக்ரவர்த்தி போஷகர்கள் ரூ. 500

(b) போஷகர்கள் ரூ. 250

(c) ஸஹாயகர்கள் ரூ. 100.

(d) சந்தாதாரர்கள் வருஷத்திற்கு ரூ. 12 விதம் முன்பணமாகச் செலுத்த வேண்டும். போஸ்டேஜுக்காக 3 ரூ. தனி. ஒரு வருஷத்தில் தமிழ் தெலுங்கு ஆகிற ஒவ்வொருலிபியிலும் பெரிய அளவில் 800 பக்கங்கள் அல்லது சிறிய அளவில் 1600 பக்கங்களுக்குக் குறையாமல் புஸ்தங்கள் வெளியிடப்படும்.

### முக்கியமான அறிவிப்பு

சக்ரவர்த்தி போஷகர்களாலும் போஷகர்களாலும் சபைக்குச் செலுத்தப்படும் தொகைகள் மாத்திரம் செலவுசெய்யப்படாமல் சபைக்கு மூலதனமாகச் சேமித்துவைக்கப் படும். அங்ஙனம் பேருதவிபுரியும் மஹான்களின் பெயரால் அவரவர்கள் செலுத்திய தொகைக்குத் தக்கபடி ஒரு புத்தகமோ பல புத்தகங்களோ அச்சிடப்படும். இந்த வகை யில் இதுவரை அச்சிட்ட விவரங்கள் வருமாறு :—

1. கராலபாடி ரங்கநாதய்யா. இவர் பெயரால் தெலுங்கு பாஷையில் விஷ்ணு ஸஹஸ்ரநாமடீகை அச்சிடப்பட்டிருக்கின்றது.

2. மத்தால. ராமசந்திர செட்டியார். இவர் பெயரால் தத்வசேகராதி நான்கு ரஹஸ்யங்கள், அருளிச் செயல் ரஹஸ்யம், ஈட்டுப்ரமாணத்திரட்டு இவை தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

3. M. சக்ரவர்த்தி ஐயங்கார். இவர் பெயரால் தெலுங்கு லிபியில் பாதுகாஸஹஸ்ரம் அச்சிடப்பட்டது.

4. ராவ்ஸாஹிப. S. ரங்கஸ்வாமி ஐயங்கார். இவர் பெயரால் ஆச்சான்பிள்ளை யருளிச் செய்த பரந்த ரஹஸ்யம் சென்ற மாதத்தில் அச்சிடப்பட்டது.

5. உம்மிடி. ஸ்ரீராமுலு செட்டியார். இவர் பெயரால் தெலுங்கு டீகை திருமந்த்ரார்த்தம் அச்சிடப்பட்டது. மற்றவை பின்வரும்.

இப்படிக்கு

B. முஸலப்ப ரெட்டியார், அட்வகேட்,

ஸெகிரிடரி, 8, முல்லாஸாஹிப் லேன், G. T.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 8.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10-4-1949<br>ஸர்வதாரிவருஷ பங்குனிமீ | 8-வது பகுதி. |
|---|---|---|

## எம்பெருமானாரும்—திருக்கோட்டியூரும்.

* பஞ்சாசார்யபதாச்ரித: * [ஐந்து ஆசாரியர்களின் திருவடிகளை ஆச்ரயித்தவர்] என்று போற்றப்படுகின்ற ஸ்வாமி யெம்பெருமானார்க்குத் திருக்கோட்டியூர் நம்பிகளும் ஒரு ஆசாரியர் என்பதை உலகமறியும். * கோஷ்டீபூர்ணகுருபஸத்திகுசலோ யாம் சச்வதாஸேதிவாந் * [illegible] என்று தொடங்கி பட்டர் அருளிச் செய்தபடியும், குருபரம்பராப்ரபாவம் முதலிய சரித்திர நூல்களில் உள்ளபடியும், ஸ்ரீ வசந பூஷண வியாக்கியானம் முமுக்ஷுப்படி வியாக்கியானம் முதலியவற்றில் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தபடியும் ஸ்வாமி யெம்பெருமானார் திருக்கோட்டியூர்க்குப் பல கால் நடந்து துவண்டு நிதியான பொருளைப் பெற்றிருந்தார் என்பது விவாதமற்ற விஷயம். அப்படி பெற்ற பொருளை உடனே ஆசார்ய நியமனத்தைக் கடந்தும் அவ்வூரிலேயே சிலபல ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வாரி யிறைத்துவிட்டு எம்பெருமானாரென்கிற சிறப்புப் பெயர் பெற்றார் என்பதும் தேசமெல்லாம் வழங்கும் இதிஹாஸமாகவுள்ளது. இது நிற்க.

சாஸ்திரங்களில் ஒரு கட்டளையான வசனம் நம்பூருவாசாரியர்களால் ரஹஸ்ய க்ரந்தங்களில் அடிக்கடி கையாளப் பட்டிருக்கக்காண்கிறோம்; அதாவது—

* [illegible]
[illegible] *

* குரும் ப்ரகாசயேத் தீமாந் மந்த்ரம் யத்நேந கோபயேத்,
அப்ரகாச ப்ரகாசாப்யாம் க்ஷீயேதே ஸம்பதாயுஷீ * என்பதாக.

இதன் பொருள் என்னென்னில்; விவேகியாயிருக்கும் சிஷ்யன் ஸ்வாசார்யனை நன்றாக வெளியிடக்கடவன்; ஆசார்யன் உபதேசித்த மந்த்ரத்தை மாத்திரம் அப்படி வெளியிடாமல் வெகு ஜாக்ரத்தையுடன் மறைத்து வைத்துக் கொள்ளக்கடவன். இப்படியல்லாமல் வேறு விதமாக நடந்து கொள்ளும் பக்ஷத்தில் (அதாவது) ஸ்வாசார்யனை ப்ரகாசப் படுத்தாம லிருக்கை, மந்த்ரத்தை மனம்போனபடி வெளியிட்டுவிடுகை ஆகிய இப்படிப்பட்ட விபரீத காரியங்களைச் செய்யும் பக்ஷத்தில் ஸம்பத்தும் ஆயுளும் குன்றும்—என்பது மேலே யெடுத்துக் காட்டிய ச்லோகத்தின் பொருள். இவ்விரண்டு வகையான குறைகளும் ஸ்வாமி

யெம்பெருமானர் பக்கலிலே ஏற்க்கிடப்பதாகச் சங்கிக்க இடமுள்ளது. (1) தமக்கு
ஆசாரியர்களாக அமைந்த ஐந்து பெரியார்களில் ஒருவர்க்கும் ஒரு தனியன்கூட ஸ்வாமி
ஸாதிக்கவில்லை. தமக்கு நேரே ஆசார்யரல்லாத ஆளவந்தார்க்கே தனியனிட்டிருக்கிருர்.
ஆகவே * குரும் ப்ரகாசயேத் தீமாங் * என்ற முதல் கட்டளை நிறைவேற்றப் படவில்லை
யென்று தேறிற்று. (2) திருக்கோட்டியூரில் தாம் யதேஷ்டமாக நடத்தினதொரு செய்கை
யினல் * மந்த்ரம் யத்நேந கோபயேத் * என்கிற இரண்டாவது கட்டளையும் நிறைவேற்றப்
படவில்லையென்று தேறிற்று. சிறந்த ஆசார்ய பதவியில் வீற்றிருந்து உலகம் போற்ற
நின்ற இப்பேராசிரியர் பக்கலில் இவ்வகைக் குறைகள் இடம் பெறலாமா? என்று ப்ரதி
பக்ஷிகளோ ஜிஜ்ஞாஸுக்களோ கேட்டால் என்ன விடையிறுப்பதென்று சிலர் சிந்திக்கின்
ருர்கள். அன்னவர்களுக்குத் தெளிவு பிறப்பிக்கவேண்டியே இந்த வியாஸம் எழுதப்
படுகின்றது.

மேலே சங்கித்த இரண்டு குறைகளுக்கும் ஸ்வாமி பக்கலில் அவகாச லேசமும்
இல்லையென்பது ஈண்டு நிரூபிக்கப் படுகிறது. இரண்டாவது விஷயத்திற்கு முன்னம்
பரிஹாரம் தெரிவித்து, பின்னை முதல் விஷயத்திற் பரிஹாரம் தெரிவிக்கிருேம். * மந்த்ரம்
யத்நேந கோபயேத் * என்ற கட்டளைக்கு விபரீதமாகத் திருக்கோட்டியூரில் கோவில் கோபு
ரத்தின் மேலேறி வாரியிறைத்து விட்டார் என்று சிலரோ பலரோ நினைத்திருப்பதும் சொல்லு
வதும் முறையல்ல. அங்கு நடந்த வ்ருத்தாந்தத்தின் உண்மை யாதெனில்; கேளீர்.
ஸ்வாமி முதன் முதலாகத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளினபோது அங்கு ஓரிடத்தில் நின்று
"நம்பி திருமாளிகை யெது?" என்று சிலரைக் கேட்க, அவர்கள் "அதோ தெரிகிற
கூரை" என்று அவருடைய திருமாளிகையைக் காட்ட, அங்கிருந்து அந்தத் திருமாளிகை
வரையில் திருவடியால் நடந்துசெல்லாமல் அங்கிருந்து தெண்டன் ஸமர்ப்பித்துக்
கொண்டே [ப்ரணுமபரம்பரைகளினலேயே] நம்பிதிருமாளிகையைச் சென்று சேர்ந்தார்
ஸ்வாமி. இதைக் கண்ட அவ்வூரார்க்கு அப்போதுதான் நம்பி யினுடை வைபவம் தெரிய
வந்தது. சதுச்சாஸ்த்ர வித்வத் ஸார்வபௌமரான ஸ்வாமி இப்படி ஆதரிக்கும்படியான
பெருமைவாய்ந்த மஹாநுபாவர் நீறுபூத்த நெருப்புப் போல மிகவும் ஏகாந்த சீலராகவே
அவ்வூரில் எழுந்தருளி யிருந்தார். ஸ்வாமியின் உபஸர்ப்பண விசேஷங்களினுல் நம்பியி
னுடைய இப்படிப்பட்ட பெருமையை அவ்வூரார் அப்போதாகத் தெரிந்து கொண்டாலும்
அவரை அவர்கள் அணுகிச்சென்று அர்த்த விசேஷங்கள் கேட்க அவகாச மில்லாமலிருந்தது.
ஸ்வாமியே பலகால் நடந்துவண்டு கேட்க வேண்டியிருந்ததென்ருல், மற்றையோர்கள்
கேட்பதற்கும் பெறுவதற்கும் ப்ரஸக்தியேது? அவர்கள் நம்பிபக்கலில் அணுகுவதற்கும்
அவகாசமில்லாமலிருந்தது. ஸ்வாமி நம்பெருமாள் ஸன்னிதியிலிருந்து அடிக்கடி அவ்வூர்க்கு
வருவதும் போவதுமாயிருந்தபடியாலே அவர்கள் விசாரித்து ஏதோ விசேஷார்த்தங்கள்
பெறுவதற்கு ஸ்வாமி இங்ஙனே வருவதும் போவதுமாயிருக்கின்ருர் என்பதைத் தெரிந்து
கொண்டு ஒரு ஸமயத்தில் ஸ்வாமி யிடத்திலே மிகவும் விநயமாக வணங்கிநின்று இங்ஙனே
விஜ்ஞாபித்தார்கள்;— "ஸ்வாமிந்! நாங்கள் இவ்வூரிலேயே பிறந்து நம்பிதிருமாளிகைக்கு
ஸமீபத்திலேயே வர்த்தித்தாலுங்கூட * தண்டாமரையினுடன் பிறந்தே தண்டேன்நுகரா
மண்டூகம் * என்றுப்போலே நம்பியிடத்துள்ள விசேஷங்களை க்ரஹிக்க சக்தியற்றவர்களா
யிருக்கின்ருேம்; தேவரீர்தாம் * வண்டே கானத்திடைப் பிறந்தும் வந்தே கமலமது வுண்
ணும் * என்றுப்போலே நெடுந்தூரத்திலிருந்து வந்தும் அந்த விசேஷங்களை க்ரஹிக்கும்
பாக்கியமுடையீர்; இப்படி பலகால் துவண்டு நடந்துகொண்டிருக்கின்ற தேவரீர்க்கு
அவசியம் நிதி கிடைத்தே தீரும்; அப்படி கிடைக்கும்போது அறிவிலிகளான அடியோங்



களையும் சிறிது கடாக்ஷித்தருளவேணும்; * கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி நினைத்து
முலைவழியே நின்று பால்சோர * என்னும்படியான பெருமைவாய்ந்த தேவரீர் திருவுள்ள
மிரங்கி எமக்கு அருள் செய்தாலொழிய வேறு விதமாக நாங்கள் அவ்வர்த்தங்களைக் கேட்டு
உஜ்ஜீவிப்பதற்கு ஈஷத்தும் இடமில்லை. நம்பிபக்கலில் நாங்கள் அணுகவோ ப்ரார்த்
திக்கவோ பெறவோ ப்ரஸக்தியே யில்லாமையால் ஏழையரான வடியோங்களை ஸமயவிசே
ஷத்தில் திருவுள்ளத்தில் கொண்டிருந்து கடாக்ஷித்தருளவேவேணும்."—என்று.

இப்படி பலகால் வேண்டிக்கொண்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களின் ச்ரத்தாபக்தி
யதிசயங்களைத் திருவுள்ளம்பற்றியிருந்த ஸ்வாமி * பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம்
ஆரியர்காள் கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின் * என்று தாமே மற்ருேரவதாரத்தில்
பேசி வைக்கும்படியான பெருமை பொருந்தியவராதலால், அப்படிப்பட்ட ச்ரத்தாளுக்க
ளான ஸ்ரீ வைஷ்ணவர்களை ஸன்னிதியின் மேல்தளத்திலே ஏகாந்தமாக அழைத்துச்சென்று
அவர்களுக்குப் பரமக்ருபையுடன் உபதேசித்தருளினுர். இப்படி யல்லாமல், அங்கே, மேல்
கோபுரத்தருகே நின்றுகொண்டு வீதியில் போகிறவர்களை யெல்லாம் வம்மின் கொண்மின்
என்றழைத்து அர்த்தங்களை வாரியிறைத்துவிட்டார் என்று சிலர் நினைப்பதும் சொல்லுவதும்
வஸ்துஸ்திதியன்று. அப்படி வாரி யிறைத்திருந்தால் அதனுல் யார்க்கும் யாதொருபயனு
மில்லை. ஏனென்னில்; * வதைரக்ஷிதொவா வ்யயஃஸ்யாக யஃரூாஹு தணவவா— * பத்ரே
க்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச்சாச்ருத ஏவ வா * என்பது ப்ரஸித்தமான சாஸ்த்ரம்;
க்ரமப்பட்டு ஆசார்ய ஸந்நிதியில் நிதிபாகப்பெறவேண்டிய மஹார்த்தம் ஏடுபார்த்து க்ர
ஹிக்கப்பட்டாலும், அபேக்ஷையில்லாதிருக்க யாத்ருச்சிகமாகக் காதில் விழப்பெற்ருலும்
அது பயனற்றதே—என்பது மேலே குறித்த வசனத்தின் பொருள். இதனை ஸ்வாமியறிந்
திலர் என்பது அஸம்பாவிதம். அறிந்துவைத்தும் கருணதிசயத்தாலே தம்மைமறந்து வாரி
யிறைத்துவிட்டாரென்னில், இப்படிச் சொல்லுகிறவர்கள் இதையொரு மஹாகுணமாக
நினைக்கவேண்டுமேயொழிய, குறையாக நினைத்துச் சங்கிக்க இடமில்லை. உண்மையில்
அங்ஙனம் நடந்ததில்லை. ச்ரத்தாளுக்களும் ப்ரார்த்தித்திருந்தவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்
களுக்கே அருமருந்தாக உபதேசித்தருளப்பட்டது. * மந்த்ரம் யத்நேந கோபயேத் * என்ப
தற்கு—ஸர்வாத்மநா ஒருவர்க்குமே உபதேசிக்காமல் மூடி மூடியே வைத்துக்கொள்ள
வேணும் என்பதாகப் பொருள்என்று நினைப்பது பொருந்தாது. அப்போது உபதேச பரம்
பரையே இல்லையாய்விடும். எந்த மந்த்ரமும் யாருக்குமே ப்ராப்தமாகாமலிருக்கவேணும்.
மற்ற ஆசார்யர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள் என்றும், ஸ்வாமி யெம்பெருமானர்
க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்றும் சொல்வதற்குச் சாலவும் இடமுண்டு. நம்பியின் திரு
வாணையை மீறி யுபதேசித்தார் என்பது உண்டு. அந்தக் குற்றத்தை ஸ்வாமி தாமேயிசைந்து
மறுமொழி கூறினது ப்ரஸித்தமாயிருப்பதால் அதில் இப்போது விசாரமொன்றுமில்லை.
அநதிகாரிகளுக்கும் வாரி யிறைத்துவிட்டார் என்று கொண்டு கூறும் ஆக்ஷேபத்திற்கே
இங்குப் பரிஹாரமுரைக்கப்பட்டது. "மனமுடையீரேன்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்
சிக்குநானும் நமருமென்னும்படி ஸர்வரும் அதிகாரிகள்" என்கிற ஆசார்யஹ்ருதய ஸ்ரீ ஸூக்தி
யின்படி அதிகாரிகளான ஸச்சிஷ்ய லக்ஷண பூர்த்தியுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே ஸ்வாமி
உபதேசித்தருளினுர் என்கிற பரமார்த்தத்தை நிரூபித்தோமானேம்.

இனி, * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்ற முதற் கட்டளை ஸ்வாமிபக்கலிலே கண்ட
தில்லையே யென்கிற சங்கைக்குப் பரிஹாரமுணர்த்துகிருேம். இதற்கு பஹிரங்க ஸமாதான
மென்றும் அந்தரங்க ஸமாதானமென்றும் இரண்டுண்டு. இரண்டையும் தெரிவிக்கிருேம்.

பஹிரங்க ஸமாதானத்தை முன்னே தெரிவிக்கிறோம். * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்ற கட்டளையை மற்றையாசிரியர்களெல்லாரும் எவ்விதமாகப் பரிபாலனம் செய்திருக்கிறார் களோ அவ்விதமாகவேதான் எம்பெருமானாரும் பரிபாலனம் செய்திருக்கிறார். ஸ்ரீமந்நாத முனிகள் முதலான பூர்வாசார்யர்களும் தம்தம் ஆசிரியர்களுக்குத் தனியன் இயற்றி யநுஸந் திப்பது, காலக்ஷேப ப்ரஸங்கங்களில் அவ்வாசார்யர்களின் பெருமைகளைப் பன்னியுரைப்பது என்று இவ்விதமாகத் தானே நடந்து கொண்டார்கள். ஸ்வாமியும் அவ்விதமாகவே நடந்து கொண்டார். பெரியநம்பி முதலான தம்ஆசிரியர்களுக்கு இன்றைக்கும் வழங்கிவரும் தனியன்களெல்லாம் ஸ்வாமி பணித்தவையே. தம்முடைய வாழ்நாளில் அவ்வாசிரியர்களின் பெருமைகளை “போற்றியுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ் சாற்றிவளர்ப் பதும்” செய்துகொண்டே யிருந்தாரென்பதில் என்ன ஸந்தேஹம்? வேறு எவ்விதமாக குருப்ரகாசநம் பண்ணுவது? பண்ணத்தகுந்த முறையில் பண்ணியேயிருக்கிறார்—என்கிற இது பஹிரங்க ஸமாதானம். எல்லாரும் சொல்லிப்போருகின்ற ஸமாதானம் இதுவே.

இனி அந்தரங்க ஸமாதானமாவது, கேண்மின். ஸ்வாமி தமக்கு ஸாக்ஷாத் ஆசார் யர்களான ஐவர்களில் ஒருவர்க்கும் தாம் தனியன் இடவில்லை, அந்தத் தனியன்களெல்லாம் வேறு சிலர் இட்டவையே என்றே வைத்துக்கொள்வோம். ஆளவந்தார் விஷயமாக ஸ்வாமி தனியனிட்டிருக்கிறாரென்பதில் ஸந்தேஹமோ விவாதமோ இல்லையே. * யத்பதாம்போருஹ த்யாந வித்வஸ்தா சேஷ கல்மஷ:, வஸ்துதாம் உபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம். * என்கிற இந்தத் தனியன் கீதாபாஷ்யத்தின் தொடக்கத்தில் இருப்பதால் இது ஸ்வாமியின் ரசனையே யென்பது நிர்விவாதம். ஆளவந்தாருடைய திருவடிகளிரண்டைமாத்திரம் சிந்திப்பதாக இங் குக் கூறுகின்றதன்று. இங்குள்ள * பதாம்போருஹ சப்தத்தினால் பதினொன்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. அவை எவையென்னில்; ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தே யிருக்கின்றன. அவர் ஆசரித்த இரண்டு திருவடிகள் (நம்மாழ்வாருடைய திரு வடிகள்;) ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசாரியர்களான ஐவருடைய திருவடிகள் பத்து; ஆக இப்பதினான்கு திருவடிகளைச் சிந்திப் பதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். விவரித்துக் காட்டுகிறோம், காண்மின்.

யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே; என்று ஸமாஸம். (ஸம்பந்தஸாமாந்யே ஷஷ்டீ என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்ன படி. மறுபடியும் ‘யஸ்ய பதாம்போருஹே’ என்றால்—ஆளவந்தார்தம் * மாதா பிதா யுவதய: * என்கிற ச்லோகத்தில் “ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா * என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ர ஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம்போருஹ சப்தத்தினாலேயே எளி தாகத் தெரிவிக்கப்படும். மீண்டும் ‘யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி’ என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவ ராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. ‘பதாம்போருஹ’ என்பதில் இரண்டுபதங்கள் உள்ளனவன்றோ; (பத- என்றும், அம்போருஹ என்றும்.) திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினால் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினால் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிறதென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்றால் திருவடி களைச் சொல்லுமோவென்னில்; * தாவி வையங்கொண்ட தடந் தாமரைகட்கே * (திருவாய் மொழி. 6—9—9.) என்கிற ஆழ்வார் ப்ரயோகத்தை யறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி



பண்ணமாட்டார்கள். “தாவி வையங்கொண்ட தடந்தாளிணை” என்னவேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வட மொழியிலுமுண்டு; அபஹ்நுதியலங்காரமென்பர்கள்.

ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார் யர்களையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்குமழகு ஸஹ்ருதயைக ஹ்ருதயங்கமம். “குரும் ப்ரகாசயேச் சிஷ்ய:” என்னாமல் “குரும் ப்ரகாசயேத் தீமாந்” என்று மூல ப்ரமாணத்தில் இருக்கையாலே மஹாமேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ண லாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதாவைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரத்நம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் வீறு இங்ஙனே யன்றோ இருப்பது. இதுதான் அந்தரங்க ஸமாதானமென்பது.

இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி எதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்து கொள்ளும்படி யியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம். அன்னவர் கள், முந்துற முன்னம் வெளியிட்ட பஹிரங்கஸமாதாநத்தைக்கொண்டு த்ருப்திபெறுக.

* யத்பதாம்போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றொரு விசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக் களையிட்டு ஆளவந்தார்திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திரு வடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அதுதன்னிலும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசாரியர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனே யென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரிய நம்பி; அவருடைய நிஜநாமதேயம் பராங்குசதாஸர் என்பது. வாக்ய குருபரம்பரையில் ‘ஸ்ரீமதே ராமாநுஜாயநம:, ஸ்ரீமத்யாமுநமுநயே நம:” என்றவாக்யங்களுக்கிடையில் “ஸ்ரீபராங்குச தாஸாய நம:” என்றிருப்பது கொண்டும் பெரியநம்பியினுடைய திருநாமம் பராங்குச தாஸ ரென்பதே யென்றறியலாம். பதாம்போருஹ என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறு ரென் னில், மற்றை நான்கெழுத்துக்களினாலும் நான்கு ஆசார்யர்கள் ஸூசிதர்களாகிறபடியை யும் காட்டவேண்டாவோ? எனறு. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்த மில்லை. மஹாவிவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக்கூடும். ... ... ... *

## “ஆத்மதா பலதா:.”

நம் பூர்வாசார்யர்கள் திவ்யப்ரபந்த வியாக்யானம் முதலிய ஸம்ப்ரதாயக்ரந்தங்க ளில் ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராண பாஞ்சராத்ரங்கள் முதலான பல பல ப்ரமாணங்களையும் உதாஹரித்தருளியுள்ளார்களென்பது யாவருமறிந்ததே. அந்த ப்ரமாணங்களில் சிலவற்றை கற்றுணர்ந்த பெரியார்களுங்கூட முறைவழுவாக அச்சிட்டுவிட்டபடியால் அவற்றைப் பின்புள்ள வித்வான்களும் விசேஷவிமர்சமின்றிக்கே அந்த அச்சுப்பிழைகளை அகற்றுமலே அப்படியே அநுஸந்தானம் செய்துவருவது ஒரு ரூடியாக ஆய்விட்டது. *அர்ச்சாவ தாரோ

பாதாநவைஷ்ணவோத்பத்தி சிந்தகம், மாத்ருயோநிபரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிண:*
என்கிற ப்ரமாண வசநத்தை ஸ்ரீ வசநபூஷண வ்யாக்யாநாதிகளில் "அர்ச்சாவதாரோபா
தாநம்" என்று தனிப்பதமாகப் பிரித்து யாரோசிலர் அச்சிட்டு விட்டார்கள்; அப்படித்
தனிப்பதமாகப் பிரித்தால் என்ன அர்த்தம் ஆகும் என்பதைக்கூட விமர்சியாமல் வித்வான்
களுங்கூட (சிலர்) நாளைக்கும் அப்படியே வ்யவஹரித்து வருகிறார்கள். அவ்விதமான வழுக்
களில் ப்ராக்ருதம் ஒரு பெரியவழுவை யெடுத்துக்காட்டித் திருத்தம் உணர்த்த விரும்புகி
றோம்.

* ஆத்மதா பலதா * என்கிற ப்ரமாணவாக்யம் காலக்ஷேபரஸிகர்களான ஸ்வாமிகள்
யாவர்க்கும் தெரிந்ததே. இதை நம் ஆசாரியர்கள் திவ்யப்ரபந்த வியாக்யானங்களில்
கையாண்டிருக்கிறார்கள். இது எவ்விடத்து ப்ரமாணம்? இதன் உண்மையான வடிவம்
எப்படிப்பட்டது? என்று விமர்சியாமலே "ஆத்மதா பலதா" என்றே சொல்லி ஸபைகளில்
உபந்யாஸங்களும் செய்து வருகிறார்கள். எம்பெருமான் அடியார்களுக்குத் தன்னை அநு
பவிக்கலாம்படி கொடுத்து, அநுபவிக்கைக் குறுப்பான வலிமையையும் கொடுத்தருளுகிறான்
என்கிற விவக்ஷையில் இந்த ப்ரமாணம் கையாளப்பட்டு வருகிறது. ஆத்மதா என்றும்
பலதா என்றும் ஆகாராந்தமாகச் சொன்னால் இந்தச் சொல் பகவானிடத்தில் எப்படி அந்
வயிக்கும்? ஆத்மதா என்றால் அது ஸ்த்ரீலிங்கச்சொல்வடிவமாகத் தோன்றவில்லையா? புரு
ஷோத்தமனை இப்படிச் சொல்லவேண்டிய அவசியமென்ன? என்று ஆராய வேண்டியது
பண்டிதர்களின் கடமை. இந்த ப்ரமாணத்தைப் பரம்பரையாய் இப்படியே பலரும் சொல்
லிக்கொண்டும் எழுதிக்கொண்டும் வருகிறார்களாதலால் ஏதோ அவிசாரிதரமணீயமாக
வந்துகொண்டிருக்கின்றதென்றே சொல்லியாகவேண்டும்.

இந்த ப்ரமாணமானது அத்யயனம் பண்ணப்பட்டுவருகிற க்ருஷ்ணயஜுர்வேதத்தி
லுள்ளது. நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்திலும் ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்
நத்திலுமாக இருமுறை ஓதப்பட்டு வருகிறது இந்த வாக்யம்.

*ய ஆத்மதா பலதா யஸ்ய விஶ்வ உபாஸதே ப்ரஶிஷம் யஸ்ய தேவா: ।
யஸ்ய சாயாம்ருதம் யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥*

என்பது பரிபூர்ணமானருக்கு. இதற்கு அநாதியான பதபாடமும் ஓதப்பட்டு வருகிறது.
ஆத்மதா இத்யாத்ம—தா: பலதா இதி பல—தா: என்று விஸர்க்காந்தமாகவே ஆஸேது
ஹிமாசலம் ஸமகண்டமாக ஓதப்பட்டு வருகின்றது. இதில் எவ்விதமான பாடபேதமும்
கிடையாது. [ஆத்மாநம் ததாதீதி ஆத்மதா:; பலம் ததாதீதி பலதா:.] ஆத்மாவை [தன்னை]க்
கொடுப்பவன்—ஆத்மதா:; பலத்தைக் கொடுப்பவன்—பலதா:. முடிவில் விஸர்க்கமிருந்
தால் பஹுவசநமாக ஆய்விடுமேயென்று சிலர் மயங்கியே விஸர்க்கத்தையொழித்து
ஆத்மதா என்றும் பலதா என்றும் அவிஸர்க்கமாகச் சொல்லுவது. அந்த மயக்கம்
வேண்டா; தெளியும் வழி காட்டுகிறோம். ஸோமபா:, விஶ்வபா:, ஶங்கத்மா:, வரிவோதா:,
ரூபதா:, ஸுவாநதா:, வஸுதா:, அக்ஷதா: என்று இப்படி பல பல பதங்கள் ப்ரத
மாவிபக்தியின் ஏகவசநத்தில் வருவன. * ஆதோ மநிந் க்வநிப் வநிபஶ்ச * (அஷ்டாத்
யாயி. 3—2—74) என்கிற ஸூத்ரத்தினால் 'விச்' வந்து ஆத்மதா: என்றும் பலதா:
என்றும் ஸவிஸர்க்கமாக நிஷ்பந்நமாகிற தென்று உணரவேணும். த்விதீயாபஹுவசநத்
தில் தான் ஆத்மத: என்றும் பலத: என்றும் வரும். சப்தமஞ்ஜரியில் விச்வபா: என்று
காட்டியிருப்பதையும் ஸ்மரிப்பது.

ஆகவே, சில பதிப்புகளில் ஆத்மதா பலதா என்று அவிஸர்க்கமாகக்கண்டாலும் ப்ரா
மாணிகர்களும் நிர்மத்ஸரர்களுமான பண்டிதர்கள் விஸர்க்கமிட்டுத் திருத்திக்கொள்ளவேணு
மென்று ஸவிநயம் விஜ்ஞாபித்து நிற்கிறோம். ... ... *

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஆச்சான்பிள்ளை அஷ்டாத்யாயி

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

வரவரமுனியடி வணங்குமாரியர்
திருவடி யிணைகளென் சிரமேற் சேர்கவே.

## —: முதல் அத்யாயம். :—

1. உலகில் மனிதர்களுக்கு இருள்துயக்கு மயக்கு மறப்புகள் ஸர்வாத்மநா ஸம்பா
விதம். இக்குறைகளுக்குத் தப்பிப் பிழைப்பார் யாருமில்லை. ப்ரமம் என்று சொல்லப்படுகிற
அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞானங்கள் கற்போல்வாரை விட்டுப்பிரியமாட்டாவென்பது திண்
ணம். ஒரு விபரீதஜ்ஞானமானது நெடு நாளாகத் தொடர்ந்து வந்தால், யதார்த்தஜ்ஞான
முண்டானவன்றே அந்த விபரீதஜ்ஞானத்தை அறவே விட்டொழிப்பதுதான் விவேகிகளின்
பணி. பல வருஷங்களாக நாம் க்ரஹித்துத் திடமாக வைத்துக் கொண்டிருந்த ஒரு கொள்
கையைத் திடீரென்று மாற்றிக் கொள்வதாவென்று லஜ்ஜித்து, துர்வாஸநா மூலகங்களான
விபரீதஜ்ஞானங்களை விடாமல் யதார்த்தஜ்ஞானத்தைப் பழுதாக்கிக் கொள்பவர்கள் மிகவும்
வருந்தத்தக்கவர்கள்.

2. இப்படிப்பட்ட சோசநீயதசையை அடியேன் அடைந்திடாமலிருக்க இளமை
முதற்கொண்டே ஊக்கமுடையேன். விவேகிகள் உண்மையுணர்த்தினால், நாம் நெடு
நாளாகக் கொண்டிருந்த கொள்கையை இன்றாக மாற்றிக் கொள்வதாவென்று நினையா
மல் உபபத்தியுள்ள யுக்தமான விஷயங்களை யார் எடுத்துரைத்தாலும் மூர்க்கத்தனமென்
னும்படியான வீண்பிடிவாதத்தை விட்டு "யுக்தியுக்தம் வசோ க்ராஹ்யம் பாலாதபி சுகாதபி"
என்ற கணக்கிலே க்ருதஜ்ஞதையுடன் கொண்டு குலாவுவதே அடியேனுடைய இயல்பு.
இதைப்பற்றி மேலொரு அத்யாயத்திலே விரியவுரைப்பேன். அது நிற்க. ப்ராக்ருத
விஷயம் கேண்மின்.

3. நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் மிகச் சிறந்த ரஹஸ்யக்ரந்தமாகக் கொண்டாடப்
பட்டு வருகின்ற பரந்த ரஹஸ்ய மென்னும் திவ்ய க்ரந்தத்தைப் பணித்தவர் ஆச்சான்பிள்ளை
என்று பலவிடங்களிலும் நம் மணவாளமாமுனிகள் அருளிச் செய்திருப்பதைக் கண்டிருந்த
அடியேன் பெரியவாச்சான்பிள்ளையையே ஆச்சான்பிள்ளை யென்று அருளிச்செய்திருக்கிறு
ரென்று கொண்டிருந்தேன். இந்தக் கொள்கை அடியேனுக்கு வெகு திடமாக அமைந்
திருந்தது. அடியேனுக்கு மாத்திரமல்ல; மற்றும் சில பெரியார்களுக்கும் இந்த நினைவே
ஊர்ஜிதமாயிருந்தது. இதில் ஏதோ உண்மைக்கு மாறுபாடிருக்கின்றதென்று நெஞ்சில்
தோன்றாமையாலும் தோன்ற ப்ரஸக்தியுமேற்படாமையாலும் இதில் அடியோடு ஆராய்ச்சி
செய்திலேன். ஆராய்ச்சி யுண்டாகி உண்மை தெளிந்த பின்பும் அவ்வுண்மையை ஒளிக்க
மனமில்லாமையாலும் அப்படி யொளிப்பது ஆத்மத்ரோஹமாகையாலும் இதனை வெளி

பிட்டே தீரவேணுமென்று தோன்றி “ ஸ்ரீ ராமாநுஜன் ” ஏழாவது பகுதியில் சுருக்கமாக வெளியிட்டேன். அதாவது பரந்தரஹஸ்யம் ஆச்சான்பிள்ளையின் க்ருதியேயன்றிப் பெரிய வாச்சான்பிள்ளையின் க்ருதியன்றென்று வெளியிட்டேன். உண்மையை நன்குணர விரும் பிய மஹான்களுக்கு விரிவு அபேக்ஷிதமானமையை யறியப் பெற்றேனாதலால் உலகுக்கு மஹோபகாரம் செய்து தீருவோ மென்கிற உத்ஸாஹங்கொண்டு இவ்வஷ்டாத்யாயியை யெழுதத் தொடங்குகின்றேன்.

4. ஒரேவிதமான திருநாமம் பலர்க்கு இருந்தால் காலப்பழமையினால் வ்யக்திப்ரமம் [பேர்மாருட்டம்] பின்புள்ளார்க்கு ஏற்பட்டுவிடுவது ஸஹஜம். இவ்விஷயத்தில் பல பல நிதர் சனங்கள் காட்டவேண்டியவை யுண்டு; அவையும் உலகுக்கு ஒருவாறு உபகாரகங்களே யாகுமாதலால் அவற்றையும் மேலே ஒரு அத்யாயத்தில் பரக்க நிரூபிப்போம். முதலில் ப்ரக்ருத விஷயத்தில் செல்லுவோம்.

5. விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களி லேயே ஆச்சான்பிள்ளை யென்கிற திருநாமத்தையும் அவருடைய ஸ்ரீஸூக்திகளின் உதா ஹரணங்களையும் மிக மிகக் காண்கிறோமாதலால் மாமுனிகளின் திருவுள்ளத்தை உள்ளபடி நிஷ்கர்ஷிப்பதே முதன்மையான காரியமாகும். ஆகவே முந்துற முன்னம் அக்காரியத்தை மேற்கொள்ளுகிறோம்.

6. உபதேச ரத்தினமாலையில் நாற்பத்தாறுவது பாசுரம் * பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய * இத்யாதி. இங்குப் பிள்ளைலோகஞ்சீயர் வியாக்கியானத்தில் (பெரியவாச்சான் பிள்ளை) என்று ப்ரதீகக்ரஹணம் பண்ணி “ அவர் குமாரரான நாயனாராச் சான்பிள்ளையும் நாலூராச்சான்பிள்ளையும் உண்டாகையாலே பெரியவாச்சான்பிள்ளை யென்று இவரை விசேஷிக்கிறது ” என்றுரைக்கப் பட்டுள்ளது. இதனால் அக்காலத்தில் ஆச்சான்பிள்ளையென்கிற திருநாமம் மூவர்க்கு வழங்கி வந்ததென்று நன்கு தெரியலாகிறது. ஒருவர்க்குப் பெரிய என்று விசேஷணம்; இன்னொருவர்க்கு நாயனார் என்று விசேஷணம்; மற்றொருவர்க்கு நாலூர் என்று விசேஷணம்—ஆக இம்மூன்று விசேஷணங்களோடு கூடிய மூன்று ஆசிரியர்களிருந்தார்கள் என்று கொள்ளவேண்டும். நியமேந விசேஷணத்தைப் புரஸ்கரித்தே வழங்குவதென்கிற நிர்ப்பந்தமில்லாமையால் விசேஷணத்தை விட்டும் வழங்கி வந்தார்கள். நம்பி, ஆண்டான், பிள்ளை என்பது முதலான பல பல திருநாமங்கள் இந்த வகுப்பில் சேரும். திருக்கச்சிநம்பி, பெரிய நம்பி, திருமலை நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, மணக்கால் நம்பி, மணற்பாக்கத்து நம்பி........ என்றிப் படி பல நம்பிகளுளர். இவர்களை விசேஷித்து நிர்தேசித்திருக்குமிடங்களுமுண்டு, அவிசேஷேண நம்பி யென்றே நிர்தேசித்திருக்குமிடங்களுமுண்டு. திருமாலையாண்டான், முதலியாண்டான், பெரியாண்டான், கந்தாடையாண்டான்;—நம்பிள்ளை, வடக்குத் திரு வீதிப்பிள்ளை, தூப்புல்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை இத்யாதி வ்யபதேசங்களும் மிகமிகக் காண்க. இத்தகைய திருநாமங்களை அவிசேஷேண நிர்தேசித்துவிட்டாலும் * அர்த்தாத் ப்ரகரணாத் லிங்காத் ஔசித்யாத் அர்த்த நிர்ணய: * என்ற கட்டளையிலே விசேஷவ்யக்திபோதம் ஸம்ப்ரதாயஜ்ஞர்களுக்கு உண்டாகிறது. எம்பெருமானார் வைபவத்தை வாசித்துக் கொண்டு போம்போது அதில் பெரும்பாலும் எல்லா நம்பிகளுடையவும் ப்ரஸ்தாவம் வரு கிறது. திருக்கச்சிநம்பி வ்ருத்தாந்தம் வரும்போது முதன்முதலாக ஒன்றிரண்டிடங்களில் திருக்கச்சிநம்பி யென்றே யெழுதிவிட்டு, மேலே அந்தத் திருநாமத்தை அடிக்கடி குறிக்க



வேண்டிவந்தால் நம்பி என்றே குறிப்பது; திருக்கோட்டியூர் நம்பி வ்ருத்தாந்தம் வந்தாலும் அப்படியே. திருமலை நம்பி வ்ருத்தாந்தம் வந்தாலும் அப்படியே. ஓரிடத்திலுமே விசேஷ நிர்தேசம் பண்ணாமலிருக்கிற வழக்கம் நம்முடைய க்ரந்தங்களில் கண்டதில்லை. அது யுக்த மான சைலியுமன்று.

7. மணவாளமாமுனிகளுக்கு விசதவாக்சிகாமணி யென்கிற விருது அஸாதாரண மானது. மயங்கவைத்து அருளிச்செய்கிற வழக்கம் அவரிடமில்லை. பெரியவாச்சான் பிள்ளையை நிர்தேசிக்கவேணுமானால் ஆச்சான் பிள்ளையென்று ஸாமாந்யத: [விசேஷணத்தை விட்டு] நிர்தேசிக்கிற வழக்கம் மாமுனிகள் பக்கலில் கண்டதில்லை.

8. இங்கு ஊன்றி நோக்குங்கால் முக்கியமாகத் தெரிவிக்க வேண்டியதொன்றுண்டு. மாமுனிகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளை பக்கலில் உள்ள கௌரவபுத்தி அளவிடமுடியா தது. உபதேச ரத்தினமாலையில் திருநாம ப்ரஸித்தி தெரிவதற்காக மூன்று பாசுரங்களில் பெரியவாச்சான்பிள்ளையென்று பெயரையிட்டுக் கூறினாராயினும் மற்ற விடங்களில் அப் பேராசிரியரைக் குறிக்க வேண்டுமிடத்துப் பெரும்பாலும் பெயரையிட்டுக் கூறுவதில்லை; இரண்டுமூன்றிடங்களை யெடுத்துக் காட்டுகிறோம் காண்மின்—

9. ஆசார்யஹ்ருதயத்தில் அதனாசிரியர் அருளிச் செயல் சந்தைகளை யெடுக்கும் போது சிலவிடங்களில் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தில் அருளிச்செய்துள்ள அர்த்தத்திற்காட்டில் வேறுபட்ட அர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றியுள்ளார். அப்படிப்பட்ட விடத்து வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை பணித்த பொருள் இன்னவிதமென்று காட்டியருளத் திருவுள்ளம்பற்றிய மணவாளமாமுனிகள் அவ்விடங்களில் எவ்விதமாக அருளிச்செய்துள்ளாரென்பதைச் சிறிது நோக்கவேணுமாரியர்கள்.

10. அதில் முதல் சூர்ணையில் “நீர்மையினால்” என்றதற்கு மூன்றுவகைப் பொருள் பணித்து ஒவ்வொரு பொருளுக்கும் நியாமகம் ஸாதிக்கையில் “ பூர்வயோஜனை * நீர்மை யினாலென்கிறதுக்குப் பூர்வர்களிட்ட வ்யாக்யானத்துக்குச் சேரும் ” என்றருளிச் செய் தார். அதாவது, பெரிய திருமொழியில் (2-8-5) பாசுரத்தின் வியாக்கியானத்திலே பெரிய வாச்சான்பிள்ளை யிட்டருளின வியாக்கியானத்திற்குச் சேருமென்றபடி.

11. அதிலேயே இரண்டாவது ப்ரகரணத்தில் * ஜந்மாந்தரஸஹஸ்ரேத்யாதி (12) சூர்ணையின் வியாக்கியானத்திலே (விளக்கினைக்கண்டு என்கிற விடத்தில்)— “ * விளக்கினை விதியில்காண்பார் என்கிறவிது பகவத் ஸாக்ஷாத்காரமாகப் பூர்வர்கள் வ்யாக்யானம் பண்ணி வைத்தார்களாகிலும் இவர் ஆத்ம பரமாகவே அருளிச் செய்தாரென்று கொள்ளவேணும் ” என்றருளிச் செய்துள்ளார். திருக்குறுந்தாண்டகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை தவிர வேறு யாரும் வியாக்கியானம் செய்தருளினாரில்லையே. இங்கும் பூர்வர்கள் என்றே நிர்த் தேசமுள்ளது.

12. ஸ்ரீவசநபூஷணத்தில் * பாஷ்யகாரர்காலத்திலே * (385) என்னும் சூர்ணையின் வியாக்கியானத்திலும் “ இக்கதையை * தருதுயரம் தடாயேல் * என்கிற பாட்டின் வ்யாக் யானத்திலே ஸங்க்ரஹேண பூர்வர்கள் அருளிச் செய்து வைத்தார்களிறே ” என்றருளிச் செய்துள்ளார். பெருமாள் திருமொழிக்கு வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளை யொருவர் அருளிச்செய்தனரேயன்றி வேறுயாரும் இட்டிருக்கக் கண்டிலோம் கேட் டிலோம்.

13. இங்ஙனே பலவிடங்கள் எடுத்துக் காட்டலாம். பத்திருபது இடங்களில் ஆச் சான்பிள்ளை, ஆச்சான்பிள்ளை யென்றே எடுத்துக் கூறியருளுமிவர் மேலேகாட்டியவிடங் களில் அப்படி கூறியருளாமையை விமர்சந குசலர்கள் விமர்சிக்கவேணும். இதனால், மண வாளமாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளை யென்று எங்குமே அருளிச்செய்வதில்லையென்று நாம் கூறுவதாகப் பிறர் கருதலாகாது. அதைப்பற்றின தத்துவத்தையும் விரியவுரைக்கின் (1) ... ... ... றோம் கேண்மின்.

## —: இரண்டாம் அத்யாய . :—

14. மணவாள மாமுனிகள் தமது வியாக்கியானங்களில் பெரும்பாலும் சில பல ஆசார்யர்களின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளை ஸம்வாத ப்ரமாணமாக வெடுத்துக் காட்டியருள்பவ ரன்றோ. அப்படிப்பட்ட விடங்களில் ஆசார்யர்களின் திருநாமங்களை வரிசையாக ஸாதித்து வரும்போது பெரியவாச்சான் பிள்ளையையும் ஸாதிக்கவேண்டிய ஆவச்யகதை நேர்ந்தால் அங்குப் பெரியவரச்சான் பிள்ளையென்றே ஸாதிப்பது உண்டு. அங்கு வேறு விதமாக ஸாதிக்கமுடியாதன்றோ. வ்யக்தியைக் காட்டியாகவேணுமே. அப்படிப்பட்ட இடத்தை யும் காட்டுகிறேன். இதுதான் இந்நூலுக்கு உயிரான பாகம் என்றும் கொள்க.

15. தத்வத்ரயத்தில் அசித் ப்ரகாணத்தில் "ஸ்பர்ச தந்மாத்ரை தொடக்கமான" (27) இத்யாதி சூர்ணைக்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் மிகவிரிவானது. அங்குப் பிள்ளைலோகாசார்யர் (மூலத்தில்) சில விஷயங்கள் அவச்யம் அருளிச் செய்யவேண்டி பிருந்தும் ஸம்க்ஷேபமாக அருளிச் செய்கிற க்ரந்தமாகையாலே அருளிச் செய்யாது விட்டிட்டாரென்று மாமுனிகள் முடிக்கிறார். அங்கு அவச்யமருளிச்செய்யவேண்டிய விஷ யங்கள் எவை? என்பதை மாமுனிகள் தாமே விரிவாகக் காட்டியருளுகிறார். அவ்வை பல பக்கங்கள் நிரம்பிய பெரிய விஷயமாகையால் இங்கு நாம் அவ்விஷய விவரணத்தில் செல்லாமல் ப்ரக்ருதத்திற்கு வேண்டியதை மாத்திரம் எடுத்துக் காட்டுகிறோம்.

16. வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் தத்வநிரூபண மென்றொரு க்ரந்தம் பணித் திருப்பதாகவும், ஆச்சான் பிள்ளை தத்வத்ரயவிவரண மென்றொரு க்ரந்தம் இட்டருளி யிருப்பதாகவும் அங்கு ஸ்பஷ்டமாகக் காட்டி அந்த க்ரந்தங்களிலிருந்து பலபல பங்க்தி களை உதாஹரித் தருளியுள்ளார். அங்கு மாத்திரமல்ல. தத்வத்ரய வியாக்கியானத்தில் பத் தெட்டு இடங்களில் ஆச்சான் பிள்ளையையும் அவருடைய ஸ்ரீஸூக்திகளையும் ப்ரஸ்தாவித் தருளுகிறார். உபக்ரமத்திலேயே "சித்தென்கிறது ஆத்மாவை" (3) என்றவிடத்து, "நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டரும் ஆச்சான்பிள்ளையும் முதலான ஆசார்யர்கள் தத்வ த்ரயமருளிச் செய்கிற விடத்தில்" என்றருளிச் செய்துள்ளார். 35, 149 முதலான சூர்ணைகளின் வியாக்கியானத்திலுங் காணலாம்.

17. ப்ரஸ்துதமான "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான" (27) இத்யாதி சூர்ணை யின் வியாக்கியானத்தில்:—

"இது தத்வத்ரய விவரணத்தில் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்த க்ரமம்"
"இது தத்வநிரூபணத்திலே ஜீயரருளிச்செய்த க்ரமம்"

என்று இரண்டு க்ரமங்களை யெடுத்துக் காட்டிவிட்டு, பிறகு அவ்விரண்டு க்ரமங்களையும் ஒருவாறு ஒருங்கவிட்டு, மேலே அருளிச்செய்துள்ள பங்க்திகளைக் காண்மின் —



"இப்படி பூததந்மாத்ரஸ்ருஷ்டி சொல்லுகிற விடத்திலே ஆவரண க்ரமம் வக்தவ்யமாயிருக்கச் செய்தேயும் அருளிச் செய்யாதொழிந் தது அபேக்ஷிதமல்லாமையன்று; ஸங்கோசேந உத்பத்தி க்ரமத்தை அருளிச் செய்தாரித்தனை; பெரியவாச்சான்பிள்ளையுமிப்படியேயிறே அருளிச்செய்தது." என்று.

இதை நாம் விவரிக்க வேண்டுமோ? "ஆச்சான்பிள்ளையும் அழகிய மணவாளச் சீயரும் விரித்துரைத்தார்கள்; பிள்ளை லோகாசார்யரும் பெரியவாச்சான் பிள்ளையும் சுருக்கிச் சொன்னார்கள்" என்பதை ஸ்பஷ்டமாக வருளிச் செய்தாராயிற்று. இதனால் மணவாள மாமுனிகளால் ஆச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளை என்று எடுக்கப்படுகிற ஆசிரியர் பெரிய வாச்சான் பிள்ளையல்லர் என்பது கல்வெட்டாகத் தேறிநின்றது. ஒரு ஸ்தலந்தன்னிலேயே 'ஆச்சான்பிள்ளை அப்படிச் சொன்னார்; பெரியவாச்சான்பிள்ளை இப்படிச் சொன்னார்' என்றெழுதி யிருக்கையாலே இருவருமொருவரே யென்று கொள்வதற்கிடமில்லை யன்றோ.

18. பெரியவாச்சான்பிள்ளை ரஹஸ்யத்ரயத்திற்கு அதிஸம்க்ஷிப்தமாக ஒரு படி அருளிச் செய்தது போல தத்வத்ரய விஷயத்திலும் அதிஸம்க்ஷிப்தமாக ஒன்று அருளிச் செய்தாரென்னுமிடம் தேறி நின்றது. ... ... ... (2)

## —: மூன்றும் அத்யாயம். :—

19. பெரியாழ்வார் திருமொழிக்குத் திருவாய்மொழிப் பிள்ளை ஒரு வியாக்கியான மிட்டருளினதாக அச்சிடப்பட்டுள்ளது. அது மணவாள மாமுனிகளுக்கு ஆசாரியரான திருவாய்மொழிப்பிள்ளை யருளிச்செய்ததன்று என்பதை அடியேன் பன்னிரு திங்களநு பவத்தில் 124, 125 பக்கங்களில் உபபத்திகளுடன் மூதலித் திருக்கின்றேன். உபதேசரத்தின மாலையில் "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே — தஞ்சீரால், வையகுருவின்தம்பி மன்னுமணவாளமுனி, செய்யுமவை தாமுஞ் சில." என்கிற பாசுரத்தில்—சிற்சில பிரபந்தங்கட்குச் சிற்சில ஆசாரியர்கள் வியாக்கி யானஞ் செய்தருளினபடியைப் பேசியுள்ளது. அதாவது, திருவாய்மொழி தவிர்ந்த மூவா யிரத்திலுள் நாலிரண்டு பிரபந்தங்களுக்கு நஞ்சீயர் வியாக்கியானம் செய்தருளினரென்றும், பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் சில பிரபந்தங்களுக்கும், வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் சில பிரபந்தங்களுக்கும் வியாக்கியானம் செய்தருளினர்களென்றும் அருளிச்செய்து தலைக்கட்டப்பட்டது. முப்பது நாற்பது பாசுரங்களுக்கு மாத்திரமே வியாக்கியானம் செய்தருளினவர்களை எடுத்துரைக் கும்போது, திருவாய்மொழிப்பிள்ளை பெரியாழ்வார்திருமொழிக்கு [461 பாசுரங்களுக்கு] வியாக்கியானம் பணித்தவராயிருந்தால், அதனை மாமுனிகள் எடுத்துரைக்க வேண்டுவது மிகவும் அவசியமல்லவா! ஸாக்ஷாத் ஸ்வாசார்யர் வியாக்கியான மருளிச்செய்திருந்தால் மாமுனிகள் அறியாதிருந்திருப்பரா? மறந்திருப்பரா? உபேக்ஷித்திருப்பரா?......ஸ்வாசார்யர் வியாக்கியானமருளிச் செய்திருந்தால் மாமுனிகள் தாமும் பிறிதொரு வியாக்கியானம் பணித்திருக்கமாட்டாரே. திருவாய்மொழிப்பிள்ளை ஸந்ததியில் தோன்றினவொரு மஹான் அருளிய வியாக்கியானமாகவே இஃது இருக்கத்தகும். குலசேகராழ்வாருடைய ஸந்ததியில் தோன்றினவொரு மஹநீயர் தொடுத்த முகுந்தமாலையை குலசேகராழ்வாருடைய க்ருதி

யாகவே வ்யவஹரிக்க நேர்ந்துவிட்டது போல இதுவும் நேர்ந்திருக்கலாம் என்று நிரூ பணம் செய்திருக்கிறேன். அங்கு முடிவில் "இப்படித்தானென்று ஸ்தாபிக்கவேணு மென்று நமக்கொரு ஆக்ரஹமில்லை" என்று மெழுதியுள்ளேன். திருவாய்மொழிப் பிள்ளை வியாக்கியானமாக வழங்கிவரும் அந்த க்ரந்தத்தில் (2—1—3) * காயுமீர்புக்கு * என்கிற பாசுரத்தின் உரையில்—'அன்றிக்கே, நம்பிள்ளையருளிச் செய்தாராக ஆச்சான்பிள்ளை யருளிச் செய்யும்படி" என்று தொடங்கி ஓர் அர்த்தமுள்ளது. இங்கே ஆச்சான்பிள்ளை யென்று குறிப்பிடப்பெற்றவர் பெரியவாச்சான் பிள்ளையாகவே யிருக்கவேணுமென்று ஔசித்யங்கொண்டு சிலர் கருதக்கூடும். அவர்கள், ஆச்சான்பிள்ளை யென்கிற திருநாமம் எத்தனை யாசிரியர்கட்கு இருந்ததென்பதை முன்னம் உணரவேண்டும். கீழே நாம் உப தேசரத்தினமாலை வியாக்கியான பங்க்தியை யெடுத்துக்காட்டி உணர்த்தியிருக்கிறோம். அதிற்காட்டிலும் ப்ரபலமான மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தியையே காட்டுகிறோ மிப்போது—

20. அந்தப் பெரியாழ்வார் திருமொழியிலேயே (3—9—4)* மாற்றுத்தாய் சென்று பாசுரத்தின் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் சில யோஜனைகள் அருளிச்செய்து உடனே பணித்துள்ள பங்க்திகளைக் காணீர்—

"ஸம்ப்ரதாயத்திலும் வந்தால் நம்பிள்ளை ஸ்ரீ பாதத்திலே கேட்ட சிறியாழ்வானப் பிள்ளைகுமாரர் பக்கலிலே கேட்ட நாலூர் பிள்ளையருளிச் செய்ததாகையாலே வந்த ப்ராபல்யமுண்டு. அவர் தாம் ஆச்சான்பிள்ளை திருத்தமப்பனாராகையாலே பிள்ளைக்குப் பரமாசார்யருமிறே. ஆகையாலே அந்த யோஜனை முற்பட வெழுதி, பிள்ளையருளிச்செய்த யோஜனை பிற்படவெழுதப்பட்டது." என்று.

இந்த வாக்யராசியில் "ஆச்சான்பிள்ளை திருத்தமப்பனாராகையாலே" என்றுள்ள ஸ்ரீ ஸூக் திகளை விவேகிகள் விசேஷித்துக் குறிக்கொள்ளவேணும். இவ்வாச்சான்பிள்ளையை நாலூ ராச்சான்பிள்ளையாக் குறிப்புரை யெழுதியுள்ளார்கள் பெரியவாச்சான் பிள்ளை யல்லர் என்பது விவரண நிரபேக்ஷம். மாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை ப்ரஸ்தாவிப்ப தானால் பெரிய என்று அவர்க்கு அஸாதாரணமாக அமைந்த விசேஷணத்தை விட்டு ஸாமாந்ய சப்தத்தாலே குறித்தருள்வது கிடையாது என்பதை நிர்மத்ஸரர்கள் திடமாக நெஞ்சிற் பதியவைத்துக் கொள்ளவேணும்.

21. 'ஆச்சான்பிள்ளைகள் மூவர்' என்பது அசைக்க முடியாமல் தேறுகின்றது. இம் மூவருள் நம்பிள்ளையை நேரில் ஸேவிக்கப் பெற்றவர் பெரிவாச்சான்பிள்ளை யொருவரே யென்றும் மற்ற இருவரும் நம்பிள்ளைகாலத்திற்கு மிகவும் பிற்பட்டவர்கள்— நம்பிள்ளையை ஸேவிக்கப் பெறாதவர்கள்— என்றும் ப்ரபல ப்ரமாண ஸித்தமானால் அதன்பிறகு சொல்ல வேண்டிய ஸமாதானம் வேறு. மூவரும் நம்பிள்ளையை ஸாக்ஷாத்தாக ஸேவிக்கப்பெற்றவர் களே யென்பது பெரியார்களின் துணிபு. "நஞ்சீயர்திருவடிகளில் கேட்டவரான நம் பிள்ளை, நஞ்சீயர்க்கும் ஆசார்யரான பட்டரை ஸேவித்திருந்தாரா இல்லையா ?" என்று ஒரு ஸமயத்தில் விசாரம் நிகழ்ந்தது. ஈடு முப்பத்தாறாயிரப்படியைப் பலகால் ப்ரவசனம் பண் ணின பெரியார்களும் சிலர் 'பட்டரை நம்பிள்ளை ஸேவித்திருக்க ப்ரஸக்தியே கிடையாது' என்றார்கள். அப்போது ஒரு மஹான் * எருளுமிறையோன் திருவாய் மொழியில் எட்டாம் பாட்டின் (4-8-8) ஈட்டில் "இது பட்டரருளிச் செய்ய நான் கேட்டேனென்று பிள்ளை யருளிச்



செய்வர்" என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியை யெடுத்துக்காட்ட, உண்மையுணர்ந்து மகிழ்ந்தார்கள். இவ்விதமாக ஒவ்வொரு விஷயத்திலும் உண்மையை உள்ளபடியுணர்த்த ப்ரமாணங்களில் குறையிராது. ... ... ... ... (3)

## —: நான்காம் அத்யாயம் :—

22. ஆச்சான்பிள்ளை என்று நிர்விசேஷமாகக் குறிக்குமிடங்களில் பெரியவாச்சான் பிள்ளை விவக்ஷிதராகக் கூடாது என்று நிபந்தனையில்லை. இந்த மருமத்தையும் சிறிது விளக்கு கின்றேன். பெரியவாச்சான்பிள்ளைவைபவம் சொல்லுவதாக மேலே மகுடமிட்டுக் கதை களையோ அர்த்தவிசேஷங்களையோ எழுதிக்கொண்டு வருமடைவில் அடிக்கடி அவ்வாசிரியர் திருநாமத்தை ப்ரஸ்தாவிக்க நேருமன்றோ; அங்கு ஸங்க்ரஹருசியாலே பெரிய என்னும் விசே ஷணத்தைவிட்டு ஆச்சான்பிள்ளை யென்றே எழுதிப்போருவது உண்டு. இது நிரவத்யமானது. உலகிலுள்ள நூலாசிரியர்களனைவர்க்கும் இந்தநடை உள்ளது. மணவாள்மாமுனிகளைப்பற்றி யெழுதிக்கொண்டு போகையில் மாமுனிகள் என்று எழுதினோமாகில் எந்த மாமுனிகளென்று ஸந்தேஹிப்பாரில்லையே. லோகஸாரங்க மாமுனிகளை அங்கு நினைப்பாரில்லையே.

23. தத்வத்ரய வியாக்கியானத்தில் (ஈச்வரப்ரகரணத்தில்) *இப்படி யீச்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே * (11.) இத்யாதியான பெரிய சூர்ணையின் வியாக்கியா னத்திலே—"க்ருதியாகையாவது.....................தான் க்ருதக்ருத்யனாகை--என்றிறே பட்டரு மருளிச்செய்தது" "க்ருதஜ்ஞனாகையாவது......பாராதேயிருக்கை என்று இதுவும் பட்டரரு ளிச்செய்தார்" என்று மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். பட்டர் என்று ஸ்ரீபராசரபட்ட ரைத்தானே ஒவ்வொரு க்ரந்தத்திலும் ஒவ்வொருவரும் எழுதிப்போருவது. மேலேகுறித்த இடத்திலேயே முந்தின சூர்ணையின் வியாக்யானத்திலே ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகமொன்றை யுதாஹரித்து [க்ஷமா ஸாபராதே] என்றிறே பட்டரருளிச் செய்தது என்று ஸாதித்திருக்கிறார். பகவத் விஷயாதிகளில் பட்டர் என வருமிடங்களில் இந்த பட்டர் யாரென்று விசாரம் தோன்ற ப்ரஸக்தியேயில்லை. மேலே யெடுத்துக் காட்டப்பட்ட தமிழ்ப்பங்க்திகளை பட்ட ருடைய எந்த க்ரந்தத்திலே நாம் காண்கிறோம். இல்லையே. ஆகவே இங்குப் பலர்க்கும் குழப்பமுண்டாகியேதீரும். அருளிச்செய்தவரோ விசதவாக்சிகாமணிகள். குழப்பமுண் டாகக் கூறுமவரல்லர். தெளியும் வழி காட்டுகின்றோங் காண்மின்; அந்தப்பெரிய சூர்ணை யின் வியாக்யானத்தில் முந்துறமுன்னம் ".........என்றிறே நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் தத்வத்ரயத்திலே அருளிச் செய்தது" என்று ஸாதித்திருக்கிறாராதலால் அடுத்தவிடங்களில் பட்டரென்பது அந்த நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டரேயென்று மிக எளிதாகவுணரலாகும். ஓரிடத்தில்கூட நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டரென்று குறிப்பிடாமல் பட்டரென்றே ஸர்வத்ர குறிப்பிட்டிருந்தாராகில் பட்டரென்கிற ப்ரஸித்தி யார்க்கு உள்ளதோ அவர்க்கேதான் அச்சொல் வாசகமாய் முடியும். அது அஸமஞ்ஜஸமுமாகும்.

24. இனி ப்ரக்ருத விஷயத்தை உற்று நோக்குமின்; மாமுனிகள் தத்வத்ரயவியாக்கி யானத்திலும் ஆச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளை மிகமிகவெடுக்கிறார்; அப்படியே ரஹஸ்ய த்ரயவியாக்கியானத்திலுமெடுக்கிறார். இதனால் ஆச்சான்பிள்ளையென்பவர் தத்வப்ரஸ்தா னத்திலும் ரஹஸ்ய ப்ரஸ்தானத்திலும் விரிவான நூல்களைப் பணித்தருளினவர் என்று ஸ்பஷ்ட மாகத் தெரிகிறது. விரிவின்றிக்கே ஸங்க்ரஹமான நூலைப் பெரியவாச்சான்பிள்ளை பணித் திருக்கிறாரென்பதையும் மாமுனிகளே ஸுஸ்பஷ்டமாகக் காட்டியருளினாரென்பதையும்

கீழ் இரண்டா மத்யாயத்தில் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டியாயிற்று. மாமுனிகள் ரஹஸ்ய ப்ரஸ்தானத்திலும் தத்வப்ரஸ்தானத்திலும் மிக விரிவான வாக்யராசிகளையே உதாஹரித்தருளினர். அங்கெல்லாம் நியமேந ஆச்சான்பிள்ளை யென்றே திருவெழுத்துச்சாத்துகிறார். விரிவான வாக்யங்களை யுதாஹரித்தருளுமிடங்கள் பல பலவுண்டே; ஓரிடத்திலாவது பெரியவாச்சான் பிள்ளையென்று ஸாதித்திருக்கிறாரா? பாருங்கள். அஸம்பாவிதமானதை அவர் எப்படி ஸாதிப்பர். ஸாதித்திருக்கவில்லை. உண்மையில் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியை ப்ரஸ்தாவிக்கு மிடத்திலே பெரியவாச்சான் பிள்ளையென்று அஸங்கோசேந ஸாதிக்கிறார். அவருடைய திருவாக்கல்லாத விடங்களில் ஆச்சான்பிள்ளையென்றே ஸாதிப்பதென்று நியமங் கொண்டிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டமாகவும் அவிசால்யமாகவும் விளங்காநிற்க, ஆச்சான்பிள்ளையென்று எடுக்குமிடங்களிலெல்லாம் பெரியவாச்சான்பிள்ளையே விவக்ஷிதர் என்று சொல்லுவது யுக்தமாகுமோ? இரண்டிலும் ஆக்ரஹமின்றிக்கேயிருக்கிற மத்யஸ்தர்களான மேதாவிகளன்றோ இதை விமர்சித்து நிஷ்கர்ஷிக்கவேணும்.

25. மற்ற க்ரந்தங்களெல்லாம் ஒருபுறமிருக்கட்டும், மணவாளமாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களே நமக்கு நற்றெளிவு பிறப்பிக்கத்தக்கவை யென்பது புநருக்தம். அவருடைய திவ்ய ஸூக்திகளில் எங்கேயாவது ஓரிடத்திலாவது பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளையருளிச் செய்ததென்று காணக்கூடியதுண்டாகில் கண்ணுடையார்கண்டு காட்டலாம். அப்படி ஓரிடமாவது காட்டிவிட்டால் மற்றவிடங்களில் ஆச்சான்பிள்ளை யென்றதற்கெல்லாம் பெரியவாச்சான்பிள்ளை யென்றே பொருள்— என்று திண்ணமாகக் கொள்ளத் தட்டுண்டோ?

26. “தத்வதீபத்திலே ஜீயர் அருளிச்செய்தார்” என்று பலவிடங்களில் காண்பதுண்டு. எந்த ஜீயர் என்று ஸந்தேஹமுண்டாகியே தீரும். சில விடங்களில் வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயரென்று விசேஷித்து அருளிச்செய்திருப்பதால்தான் ஸந்தேஹம் தொலைந்து தெளிவுபிறக்கின்றது. அங்ஙனே தெளிவு பிறப்பிக்க ஏதேனுமோரிடத்திலாவது பரந்த ரஹஸ்ய ப்ரஸ்தாவத்திலே பெரியவாச்சான்பிள்ளையென்கிற விசேஷ நிர்தேசம் காணப்படவேண்டுமே. அஃது அடியோடு இல்லையே. இதுதானே நம்முடைய ஆராய்ச்சியில் உயிராகநிற்பது. “பரந்த ரஹஸ்யத்திலே பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்தார்” என்று யாரேனுமோராசிரியர் ஏதேனுமொரு மூலையிலெழுதியிருந்தாலும் போதுமே. அருளிச்செயல் வியாக்கியான ப்ரஸ்தாவங்களிலே பெரியவாச்சான்பிள்ளையென்று எழுதுவதும் ரஹஸ்யத்ரய தத்வத்ரய ப்ரஸ்தாவங்களிலே ஆச்சான்பிள்ளையென்று எழுதுவதும் இவ்வளவேயிறே எந்த நூலிலும் காண்பது. இங்ஙனே நாமெழுதுவது மருளாகில், தெருள் கொள்ளச் சொல்ல விருப்பமுடையார் செய்ய வேண்டிய காரியம் என்ன? பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியாக ஸர்வஸம்ப்ரதிபந்நமான அருளிச் செயல் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை உதாஹரிக்கு மிடங்களிலும் ஆச்சான்பிள்ளையென்று காண்கிறது காணும்— என்று காட்டவேண்டுமே. அது எங்ஙனே காட்ட முடியும்?

27. மணவாளமாமுனிகளின் திருவடிகளைச் சிந்தனைசெய்துகொண்டே அடியேன் ஆராய்ந்தபோது மிக அருமையாகத் தோன்றினதொரு விஷயத்தையும் விஜ்ஞாபிக்கிறேன்; கேளீர். முமுக்ஷுப்படியில் “அவையாவன ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்” (97) என்கிற சூர்ணையின் வியாக்கியானத்திலே,



**“இதுதான் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் ஆச்சான்பிள்ளை இவர்களருளிச்செய்த ப்ரபந்தங்களிலே ஸுஸ்பஷ்டம்”**

என்கிற ஸூக்திவிந்யாஸமும்,

28. அது தன்னிலேயே மேலே த்வய ப்ரகரண வியாக்கியான அவதாரிகையில் **“ஆச்சான்பிள்ளை ஜீயர் முதலானாரும் இந்த ப்ரகாரமிறே அருளிச் செய்தது”**

என்கிற ஸூக்திவிந்யாஸமுமிருப்பதைக் கூர்மதியீர் குறிக்கொண்மின். முந்தின வாக்யத்தில் ஆச்சான்பிள்ளைக்கு த்விதீயஸ்தாநநிவேசமும் பிந்தின வாக்யத்தில் அவர்க்கு ப்ரதமஸ்தாந நிவேசமும் உள்ளது. இந்த வாசி எதனாலேயென்று ஆராயவேணும். ஒரு நியதியின்றிக்கே வாக்யரசனைபண்ணிப் போருகிற மற்றையோர்களைப் போலல்லாமல் அந்யூநாதிரிக்தமாகவும் மிக்க வொழுங்குபாடு பொலியவும் வாக்யரசனை செய்தருளுந் திறன் கடல்சூழ்ந்த மண்ணுலகில் மணவாளமாமுனிகளுக்கே அஸாதாரணமென்பது அஸூயுக்களும் இசைந்த விஷயம். ப்ராமாணிக ரஸிக ப்ராஜ்ஞர்கள் இதனை நெஞ்சில் ஊன்ற வைத்துக் கொண்டு மேற்குறித்த வாக்ய ஸந்தர்ப்பங்களில் விமர்சம் செய்யவேணும். இங்குள்ள மருமத்தை அடியேனே விளக்கிக் காட்டுகின்றேன்.

29. முந்தினவாக்யத்தில் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டரை முன்னேயிட்டு ஆச்சான்பிள்ளையைப் பின்னேயிட்டது ஏனென்னில்; இருவருடையவும் பௌர்வாபர்ய க்ரமத்திற்கிணங்கவேயாம். ஆச்சான்பிள்ளையென்கிற சொல்லால் பெரியவாச்சான்பிள்ளை விவக்ஷிதராயிருந்தால் அங்ஙனே பங்க்தி அமைந்திராது. நம்பிள்ளை திருவடிகளில் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் ஆச்ரயித்தபின் வெகு காலத்திற்கு அப்பால்தான் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் வந்து ஆச்ரயித்தாரென்பது மூவுலகுமறியும். ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் காண்கிற நம்பிள்ளைவைபவத்தில் நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர் வந்து பணிந்த கதை முடிவில்தானேயுள்ளது. நெடுநாள் அஸூயைகொண்டு அகன்றிருந்த அவரை முன்னேயெழுதிப் பெரியவாச்சான்பிள்ளையைப் பின்னேயெழுத ஔசித்யலேசமும் கிடையாது. இங்கு ஆச்சான்பிள்ளையென்னப்பட்டவர் உண்மையில் பெரியவாச்சான்பிள்ளையல்லாதலாலும் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர்க்குப் பிற்பட்ட ஆசிரியரேயாதலாலும் இந்த பௌர்வாபர்யக்ரமம் தப்பாதபடிக்கு மாமுனிகள் ஸூக்திவிந்யாஸம் செய்தருளியிருப்பது மிகப்பொருத்தம்.

30. இனி, பிந்தினவாக்யத்தில் ஆச்சான்பிள்ளையை முன்னேயிட்டு ஜீயரைப் பின்னேயிட்டதும் மிகப்பொருத்தம். ஜீயர் என்றது பன்னீராயிரவுரைகாரரான வாதிகேஸரி ஜீயரையிறே. அவர் ஆச்சான்பிள்ளை திருவடிகளையாச்ரயித்து உய்ந்தவரேயாதலால் இங்கும் பௌர்வாபர்யக்ரமம் தப்பிற்றில்லை. இங்கு நமக்கு முக்யமான நோக்கு முந்தின வாக்ய ஸந்நிவேசத்திலேயேயாம். மாமுனிகள் தம்முடைய வியாக்யானங்களில் அடிக்கடி உதாஹரித்தருளுகிற ஸ்ரீஸூக்திகளுக்கு எவர் வக்தாவோ அவரையேயன்றோ ஆச்சான்பிள்ளையென்று நிர்த்தேசிப்பது. அவர் பெரியவாச்சான்பிள்ளையாக இருந்தால் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டரை முன்னேயிட்டு இவரைப் பின்னே தள்ளி வாக்யரசனையமைத்தது அஸமஞ்ஜஸமேயாகும். இந்த அபக்யாதி மாமுனிகளை அணுமாத்ரமும் ஸ்பர்சிக்கக் கூடியதன்றே. இருவரையோ மூவரையோ நால்வரையோ ஐவரையோ எடுத்துப்பேசுவதானால் மாமுனிகள் ச்லோகத்திலானாலும் செய்யுளிலானாலும் அடைவுதப்பாமலே யருளிச்செய்பவரென்பதை

*சுத்தாத்மயாமுந குருத்தம கூரநாத பட்டாக்க்யதேசிகவர* என்ற யதிராஜவிம்சதிச்லோகத்தி
ஆம், *பின்னான் நஞ்சீயர்* நஞ்சீயர் செய்த* என்றிவை முதலான (உபதேசா.) பாசுரங்
களிலும் வெகு அழகாகக் காணலாம். ஆக, நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர்க்குப் பிற்
பட்டவரும் வாதிகேஸரி ஜீயர்க்கு முற்பட்டவருமான ஒரு ஆசிரியரையே ஆச்சான்பிள்ளை
யென்று மாமுனிகள் குறிப்பிடுகிருரென்பதை அவிசால்யமாகக் காட்டினேமானேம்.
அவர்தாம் பெரியவாச்சான்பிள்ளை என்று சொல்லவல்லாருளரேல் தாராளமாகச் சொல்லுக.

## —: ஐந்தாம் அத்யாயம் :—

31 பின்பழகிய பெருமாள் ஜீயர் இட்டருளின ஆருயிரப்படியில் எங்கும் பெரிய
வாச்சான் பிள்ளையென்றுள்ளதேயன்றி ஆச்சான்பிள்ளையென்று ஓரிடத்திலுமில்லையென்ப
தும் குறிக்கொள்ளத்தக்கது. [ப்ராஸங்கிகமாக இங்கு ஒன்று எழுதவேண்டியதாகிறது;
ஆருயிரப்படியில் நம்பிள்ளை வைபவ ப்ரகரணத்தில் பின்பழகிய பெருமாள் ஜீயர் ப்ரஸ்தாவம்
வருமிடங்களில் அவர் ஜ்ஞாநாதிகரென்று சொல்லியிருப்பதுதவிர 'எழுந்தருளினர், அருளிச்
செய்தார், திருக்கண்வளர்ந்தருளினர்' என்றுற்போன்ற கௌரவோக்திகளும் மிகையாகக்
காண்கின்றன. தம்மைப்பற்றித் தாமே இப்படி யெழுதிக்கொள்ளுகிருரென்பது அஸம்பா
விதமாகையாலே இங்கு அந்தச் சீயருடைய திருவடிகள் யாரேனும் எழுதியவை கலந்திருக்
குமோ வென்று சங்கிக்க இடமுளது. அது நிற்க.]

32. மிக முக்கியமான வார்த்தை யொன்று கேளீர். மாமுனிகள் முமுக்ஷுப்படி
வியாக்கியானத்தில் பரந்த ரஹஸ்ய ஸூக்திகளை அடிக்கடி யுதாஹரித்து ஆச்சான்பிள்ளை
யருளிச்செய்தாரென்று எழுதியருளினது போலவே, தத்வத்ரய வியாக்கியானத்திலும் தத்வத்
ரயவிவரண மென்றொரு க்ரந்தத்தை அடிக்கடி ப்ரஸ்தாவித்து அதை யருளிச் செய்தவர்
ஆச்சான்பிள்ளையென்று பலகால் காட்டியருளியிருக்கின்றரே; இந்த தத்வத்ரய விவரண
க்ரந்தமும் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததுதானே? என்று கேட்டால் பிறர் என் சொல்ல
வல்லார்களோ அறியோம். "ஆமாம், அதுவும் பெரியவாச்சான்பிள்ளையே ஸாதித்தது;
அவரைத்தான் ஆச்சான்பிள்ளையென்று எழுதியிருக்கிறார் மாமுனிகள்" என்று சொல்லித்
தீரவேண்டும் பிறர். இப்படி வாய்திறக்க வழியில்லாதபடியன்றே மாமுனிகள் அங்குச்
செய்தருளியிருப்பது. அது கீழ் இரண்டாமத்யாயத்தில் மூதலிக்கப்பட்டதே. [அந்த ஆச்
சான் பிள்ளைக்குப் பிரதிகோடியாகப் பெரியவாச்சான் பிள்ளையை யெடுத்துக் காட்டியிருக்
கின்றரென்பது] (பக்கம் 4-ல் 17-வது பாரா காண்க.)

33. பின்பழகிய பெருமாள் சீயர் வார்த்தாமாலையில் பெரியவாச்சான்பிள்ளையை
ஆச்சான்பிள்ளையென்றே குறிப்பிடுகிருர் என்கிற வாதம் தகுதியற்றது. கேண்மின்;
"ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்" என்று நாடுநகரமும் நன்குகந்து
போற்றுமொரு வாக்யத்தில் ஜீயரென்கிறது மணவாளமாமுனிகளையே யென்பது ஸர்வஸம்
ப்ரதிபந்நம்; ஈட்டிலும் ஸகல திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களிலும் ஸ்ரீவசநபூஷணாதி
களிலும் நஞ்சீயரையே ஜீயரென்று ஆயிரந்தடவை சொல்லியிருப்பதால் ஜீயர் திருவடிகளே
சரணமென்ற விடத்திலும் அந்த நஞ்சீயர்தாம் விவக்ஷிதர் என்று ஒருவர் சொல்லப்புக்கால்
அது எப்படி செவியேற்கத் தக்கதன்றே அப்படியே காணுமிதுவும் என்று கொள்க.

34. ஸ்ரீ வசநபூஷணத்தில் "வேல்வெட்டிப் பிள்ளைக்குப் பிள்ளையருளிச் செய்த வார்த்
தையை ஸ்மரிப்பது" என்ற முதல் ப்ரகரண வாக்யத்தையும், "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபி
மாநத்தைக் குலைத்துக்கொண்ட விவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை யென்று



பிள்ளை பலகாலுமருளிச் செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்" என்ற சரம ப்ரகரண
வாக்யத்தையும் எடுத்துக்கொள்வோம். இவ்விரண்டு வாக்யத்திலும் பிள்ளை என்கிற சொல்
நிர்விசேஷமாகவே யுள்ளது; ஆனாலும் வ்யாக்க்யாதாவான மணவாளமாமுனிகள் முந்தின
வாக்யத்தில் பிள்ளை யென்றதற்குப் பொருளாக நம்பிள்ளையை யெடுத்துக் காட்டியுள்ளார்;
பிந்தின வாக்யத்தில் பிள்ளையென்றதற்குப் பொருளாக வடக்குத் திருவீதிப் பிள்ளையை யெடுத்
துக் காட்டியுள்ளார். (அதாவது) "ஸகல சாஸ்த்ர ஸாரவிதக்ரேஸரரான நம்பிள்ளை திருவடி
களிலே பழுக்க ஸேவித்து ததேக பாதந்த்ரராய் ஸகல சாஸ்த்ர தாத்பர்யங்களையும் அவரரு
ளிச் செய்யக் கேட்டு தந்நிஷ்டராயிருக்கும் நம்முடைய ஆசார்யரான பிள்ளை" என்று
இவ்வளவு விவரணமுள்ளது. சொல் ஒன்றயிருக்க இரண்டிடத்திலும் ஒரேவிதமான
பொருளைக் கொள்ளலாகாதோவென்று ஒருவர் கேட்கலாம். வெவ்வேறு வ்யக்திகளை ஒரே
சொல்லாலே ஸ்ரீலோகாசார்யர் சொல்லலாமோ? என்றும் ஒருவர் கேட்கலாம். அதற்
கெல்லாம் சொல்லக்கூடிய உத்தரமே இங்கு முரியது.

35. "வடுகநம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையரென்பர்" என்பது
மொரு ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்தி. ஸம்ப்ரதாயத்தில் ஆண்டான்கள் பலருளர் என்று
முன்னமே காட்டியிருக்கிறோம். எந்த ஆண்டானை இங்கு விவக்ஷிக்கிறார் என்பது ஔசித்
யத்தாலன்றே நிர்ணயிக்கப்படவேண்டும். முதலியாண்டானையே இங்கு ஆண்டானென்று
கூறினதாகக் கொள்ளாமல் கந்தாடையாண்டானையே கூறினதென்று ஒருவரும், திருமாலை
யாண்டானையே கூறினதென்று மற்றொருவரும், (இன்னொருவர் இன்னொரு ஆண்டானையும்)
சொல்லப்புகுந்தால் இங்கு ப்ராமாணிகர்கள் என்ன சொல்லக்கூடுமென்பதை அறிவுடை
யார் ஆராயவேணும். முக்தகமான சொற்களும் செய்யுள்களும் ச்லோகங்களும் நூற்றுக்
கணக்கிலும் ஆயிரக்கணக்கிலுமுள்ளன. அவற்றுக்கு வக்தாக்களும் கர்த்தாக்களும்
அத்யாபி நிஷ்கர்ஷிக்க முடியாத நிலைமையே யுள்ளது. யமகரத்நாகரம்போன்ற சில பெரிய
க்ரந்தங்களுக்குங்கூட கர்த்தாக்களை நிர்ணயிக்குமதில் ஸந்தேஹமும் விவாதமும் விபர்யயமு
முள்ளன. ஸர்வாத்மநா நிர்ணயிக்க முடியாத விஷயங்களிலே நாம் தலையிட்டு நிர்ணயிக்க
ப்ரயாஸப்பட மாட்டோம். அப்படிப்பட்ட விஷயங்கள் ஆராய்ச்சிக்கு வந்தால் நாம் எவ்வித
மாக எழுதுவது வழக்கமென்பதை நம்முடைய க்ரந்தங்களிலே பரிசயமும் பரிசீலநமுமுள்ள
பெரியார்கள் அறிந்தேயுள்ளார்கள். ஆராய்ச்சிக்கு அநந்யதாஸித்தமான ப்ரமாணங்கள் பல
பல கிடைத்துவிட்டால் உண்மையை அறுதியிட்டு வெளியிடுதற்கு என்ன குறை?

36. பின்பழகிய பெருமாள் சீயர் எந்த ஆச்சான்பிள்ளையைக் குறிப்பிடுகிறரென்
கிற விசாரமே அப்ரஸக்தம். பெரியவாச்சான்பிள்ளையையே அவர் ஆச்சான்பிள்ளையென்று
குறிப்பிடுகிருரென்று முழுமனமாக ஏற்றுக்கொள்ளுவோம். அதனால் ப்ரக்ருத விசாரத்
திற்கு லாபமோ ஹாநியோ ஒன்றுமில்லையே. பரந்த ரஹஸ்யத்தையும் தத்வத்ரய விவரணத்
தையும் அந்தப் பின்பழகிய பெருமாள் சீயர் பார்த்திருந்தாரா? என்று கேட்டால் இதற்கு
ஸப்ரமாணமாக விடையிறுக்க வல்லாருண்டோ? இதே கேள்வியை மணவாளமாமுனிகள்
திறத்திலே கேட்டால் "அந்த க்ரந்தங்கள் அவதரித்துள்ளன வென்பதை நாம் மணவாள
மாமுனிகளினால்தானே தெரிந்து கொள்ளுகிறோம்; அவர் அந்த க்ரந்தங்களைப் பார்த்திருந்
தாரா? என்று கேட்பதே யுக்தமன்றே" என்று இவ்விதமான விடையன்றே ஒவ்வொரு
வரும் சொல்லக்கூடியது. ஆகவே அந்த மணவாளமாமுனிகள் ஆச்சான்பிள்ளையாக எந்த
ஆசிரியரை விவக்ஷித்திருக்கிருரென்று ப்ராப்தமான விசாரத்தில் பரந்த ரஹஸ்ய கந்தமே
யறியாத மற்றையோருடைய வாசகங்களிலே காடுபாய்வது உசிதமன்றே.

37. பெரியவாச்சான்பிள்ளைக்கு ஆச்சான்பிள்ளையென்கிற பெயரே கிடையா
தென்று வாதம் நிகழ்ந்தால் அப்போது காட்டவேண்டியவை சாலவுமுண்டு. பெரியவாச்
சான் பிள்ளையை ஒரு காலத்தில் பெரிய என்கிற விசேஷணமில்லாமல் ஆச்சான்பிள்ளை
யென்றே வழங்கிவந்தார்களென்று யாரும் இசைந்து தீரவேண்டிய விஷயமாயிற்றே.
முதலிலேயே பெரியவாச்சான்பிள்ளையென்றே வ்யபதேசிக்கமாட்டார்களே. ஒருவற்கு
ஓரே புத்திரன் ஜநித்திருக்கும்போது அவனை ஜ்யேஷ்டபுத்ரனென்ருே மூத்த புதல்வனென்ருே
வழங்குவதுண்டாவென்று பாருங்கள். கநிஷ்டபுத்ரன் பிறந்தபிறகுதானே வ்யாவ்ருத்திக்
காக ஜ்யேஷ்டபுத்ரனென்று வழங்க நேருவது. கநிஷ்ட ப்ரஸக்தியில்லாதவளவில் நிர்விசே
ஷணமாகப் புத்ரனென்றே சொல்லிவருமாபோலே வேறு ஆச்சான்பிள்ளைகள் ஏற்படுவதற்கு
முன்னே ஆச்சான்பிள்ளையென்றே வழங்கப்பட்டு வந்தவர்தானே பிறகு வ்யாவ்ருத்தி
ஸித்திக்காகப் பெரியவாச்சான்பிள்ளையென்று வழங்கப்பட்டார். ஆகவே, பெரியவாச்சான்
பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்றே முன்னோர்கள் வ்யவஹரித்துள்ளார்களென்று காட்டுவ
தானது ப்ரக்ருத விவாதத்திற்கு ஈஷத்தும் உபகாரகமாகாதிறே. .... .... (5.)

## —: ஆறும் அத்யாயம் :—

38. எறும்பியப்பாவின் திருப்பேரனாகிய தேவராஜ குருவாருடைய திருக்குமாரரான
வர வரகுருவரர் [அழகிய மணவாள நயினர்] என்பவர் ரஹஸ்யவிவேக மென்ருெரு க்ரந்த
மருளிச் செய்துளர். அது தெலுங்கு லிபியில் ஸ்ரீகாஞ்சீ ஸுதர்சந அச்சுக்கூடத்தில் நாற்பது
ஆண்டுகட்கு முன் அச்சிடப்பெற்று உலகமெங்கும் பரவியுள்ளது. அதற்கு அஷ்டாதச
பேத விசாரமென்றும் ஒரு மறுபெயருண்டு. அந்த நூலில் அவர் ஸ்வகீயமாக ஒரு பங்க்தி
யும் எழுதுவதில்லை. * ரஹஸ்யத்ரயவாக்யார்த்தாநாம் ... *
வயவாணாம் ... கிரமயா ॥ * என்று அவர்தாமே உபக்ரமத்தில் ஸாதித்துள்ளபடி
அந்தந்த அர்த்த விசேஷங்களுக்குரிய பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை அப்படியப்படியே எடுத்
துக் காட்டுவதுதான் அந்த ஆசிரியருடைய பணி. அவர் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களி
லிருந்தும், பரந்த ரஹஸ்யாதி ரஹஸ்ய க்ரந்தங்களிலிருந்தும் பலபல பங்க்திகளை உதாஹரித்
துள்ளார். அருளிச் செயல் வியாக்கியான பங்க்திகளை உதாஹரிக்கு மிடங்களில் நியமேந
"பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்தார்" என்றே யெழுதியுள்ளார். அவர்தாமே
பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகளை யுதாஹரிக்குமிடங்களில் நியமேந "ஆச்சான்பிள்ளையருளிச்
செய்தார்" என்றே யெழுதியுள்ளார். பாகால நல்லான் ரஹஸ்யம், அஷ்டச்லோகீ
வியாக்கியானம் (பெரியபடி) முதலான எந்த க்ரந்தத்தை யெடுத்துப் பார்த்தாலும் இந்த
ரீதியேதான் காண்கிறது. வ்யதிகரேண நிர்தேசம் ஓரிடத்திலுமில்லை.

39. இந்த நிரூபணங்களெல்லாவற்றுக்கும் சிகரமாக ஒரு விஷயம் கேண்மின்;
திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்த
(கீர்த்தி மூர்த்தியான) ஸ்ரீமத் பரமஹம்ஸ அயோத்யா ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி இப்படிப்
பட்ட ஆராய்ச்சிகளில் மிக வல்லவரென்பது ஜகத்ப்ரஸித்தம். அந்த ஸ்வாமி பலமஹாசார்
யர்களிடம் உபய வேதாந்த ரஹஸ்யங்கள் அதிகரித்து விச்வ விக்யாத கீர்த்தியாய் விளங்
கினவர். அந்த ஸ்வாமி மந்த்ரார்த்த தீபிகா என்ருெரு மஹா க்ரந்தத்தை தேவநாகர லிபியில்
வெகு அற்புதமாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர். மூன்று ப்ரகரணங்களும் மூன்று ஸம்
புடமாக மிகப் பெரிய ப்ரபந்தமாகவுள்ளது. இது, முமுக்ஷுப்படிக்கும் அதற்கு மணவாள
மாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்திற்கும் மிக விபுலமான ஸம்ஸ்க்ருத வியாக்கி



யானம். (ஏறக்குறைய 750 பக்கங்கள் கொண்டது.) இதில் த்வய ப்ரகரணம் மாத்தி
ரமே தற்காலம் அடியேனிடமுள்ளது. மூன்று ப்ரகரணங்களும் ஸ்ரீரங்கத்தில் உபயவே.
உத்தமநீலி ஸ்வாமி முதலான பல மஹநீயர்களிடமுள்ளன. அடியேனிடமுள்ள த்வய
ப்ரகரணத்தில் இந்த விவாதத்தை நிச்சேஷமாக அடியறுக்கவல்ல வாக்யமொன்று காட்டு
கிறேன் காண்மின்; மணவாள மாமுனிகளருளிய த்வய ப்ரகரண வியாக்கியான அவதாரி
கையில் "ஆச்சான்பிள்ளை ஜீயர் முதலானாரும்" என்றிருக்கிறதன்ருே; அவ்விடத்திற்
கான ஸம்ஸ்க்ருத வ்யாக்க்யானத்தில் [6-வது பக்கம் 18-வது வரி]

அபயப்ரதராஜபுத்ர:- பரந்த ரஹஸ்யே

என்று ஸுஸ்பஷ்டமாக எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். "அபயப்ரதராஜ புத்ரரென்
றது பெரியவாச்சான்பிள்ளையைத்தான்" என்று ஸஹஸா சொல்லத் துணிவாருண்டோ?
* ச்ருத்யர்த்த ஸாரஜநகம் * என்கிற தனியனில் *அபயப்ரதராஜ புத்ரம்* என்று கூறப்பட்ட
வரே மணவாள மாமுனிகளால் ஆச்சான்பிள்ளையென்று அருளிச்செய்யப்பட்டவராக நிஸ்
ஸந்தேஹமாய்க் காட்டப்பட்டுவிட்டது.

40. இங்கே ஒரு மருமம் அறியத்தக்கது. இப்போதும் உலகில் பலர் அப்பங்கார் என்
றும் அப்பனையங்கார் என்றும் அப்பலசாரியர் என்றும் அழைக்கப்பட்டாலும் இவர்களுக்கு
ஸ்ரீநிவாஸசர்மந் என்பது தத்துவம். இப்படி முற்காலத்தில் ஆச்சான்பிள்ளையென்று வழங்
கப்பட்டு வந்தவர்களுக்கெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணசர்மந் தான். ஆகவே ஆச்சான்பிள்ளையென்று
திருநாமம் கொண்டவர்களாக மூதலிக்கப்பட்ட மூன்று ஆசிரியர்களும் ஸ்ரீக்ருஷ்ணசர்மாக்க
ளாகவே விளங்கினர்கள். அவர்களுக்கெல்லாம் ஸம்ஸ்க்ருத வ்யபதேசம் க்ருஷ்ணபாதா:
என்ருே, க்ருஷ்ணமஹாசார்யா: என்ருே, க்ருஷ்ணஸூரய: என்ருே ஏகவிதமாகவேயிருந்
தது. வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கும் அதுவேதான் சர்மந். வாசி தெரிவதற்காகவே
சிலசில சொற்களையிட்டு வ்யாவ்ருத்தி பண்ணியிருக்கிறது. ஸம்ஸ்க்ருத பாஷையில் பெரிய
வாச்சான்பிள்ளையையும் ஆச்சான்பிள்ளையையும் ஸ்ரீக்ருஷ்ண ஸமாஹ்வயா: என்று ஏகரூப
மாகவே யெழுதுவதுண்டு இதனால் வ்யக்திமாருட்டம் உண்டாய்விடப் போகிறதே
யென்று நினைத்தே மேலே குறித்த மந்த்ரார்த்த தீபிகையில் அபயப்ரத ராஜ புத்ர: என்று
ஸுஸ்பஷ்ட விவரணம் காட்டப்பட்டுள்ளது.

41. மந்த்ரார்த்ததீபிகை யென்கிற அந்த க்ரந்தம் ச்ரமப்பட்டு ஸம்பாதிக்கவேண்டு
மாதலால், ஒவ்வொருவருடைய திருமாளிகையிலும் விளங்காநின்ற ஸ்ரீ கோசத்திலேயே
இவ்விஷயத்தை மிக விளங்கக் காட்டுவோம் மேலே குறித்த ஸ்ரீமத் அயோத்யாராமா
நுஜஸ்வாமி 1911 ஆம் வருஷத்தில் [38 வருஷங்களுக்கு முன்பு] பரிசோதித்து வெளியிட்ட
அஷ்டாதசரஹஸ்ய க்ரந்தம் எங்கும் கிடைக்கின்றதன்ருே அதில் எண்பத்தெட்டாவது
பக்கத்தில் அனைவரும் காண அந்த ஸ்வாமி யெழுதியருளிய குறிப்பு இது காணீர்.—

"பரந்த ரஹஸ்யமும் நைனாச்சான்பிள்ளையே அருளிச் செய்தது திருமந்த்ரார்த்த
வ்யாக்க்யாநாதிகளில் விசதம். ஆச்சான்பிள்ளை யென்பது இவரையே. பெரிய
வாச்சான்பிள்ளை யருளிச் செய்ததாகில் தத்வத்ரயாதிகளிற்போல் இவ்விடத்திலும்
பெரியவாச்சான்பிள்ளை யென்றே அருளிச் செய்யலாம். நைனாச்சான்பிள்ளை
யென்றே ஸம்ப்ரதாயம்."

என்று இருளும் மருளும் தொலைய எழுதப்படுள்ளது.

42. இதற்குமேல் பிறர் என்ன சொல்லக்கூடுமென்றால்,"அந்த நூலாசிரியரும் ஜீயர் ஸ்வாமியும் ஏதோ ப்ரமித்து எழுதிவிட்டார்; அதை நாம் ப்ரமாணமாக இசைந்து தீரவேண்டிய அவசிய மில்லையே" என்று சொல்லக்கூடும். இஃது உண்மையே. மணவாளமாமுனிகளுக் குப் பிற்பட்ட ஆசிரியர்கள் எழுதிவைத்ததை யெல்லாம் ஸாகல்யேந ப்ரமாணமாக நாம் இசையுமவர்களல்லோம். யுக்தமென்று தோன்றினால் கொள்ளுவோம்; இல்லையேல் தள்ளு வோம். மேலேகுறித்த ஆசிரியர்களுக்கு ப்ரமப்ரமாதங்கள் கிடையாவென்று நாம் எண்ணி யிருக்கவுமில்லை. சொல்லவுமில்லை. ஆகவே அந்த வாக்யம் அப்ரமாணமாகவுங்கூடும். ஆயினும் இங்கு நாம் அதை யெடுத்துக்காட்டினது ஏனென்னில்; ப்ரக்ருத விஷயத்தில் அடியேனுக்கு இப்போதாகவுண்டான யதார்த்த ஜ்ஞானம் பெரியோர்களான சிலர்க்கு நெடுநாள் முன் னமே யுண்டாகியிருந்தது; இன்று அடியேன் தான்தோன்றியாக இந்த விஷயத்தை விளம்பு மவனல்லேன்; ஏற்கெனவே ஆசார்யபீடத்தை வஹித்து விளங்கியிருந்த பெரியார்க ளுடைய ஸூக்தி ஸம்வாதமுமுண்டு என்று காட்டுவதற்காகவும், அந்த மஹாக்ரந்தங்களை ப்ரகாசநம் பண்ணியருளின அயோத்யாராமாநுஜ ஜீயர்ஸ்வாமி திருவடிஸம்பந்தமுள்ள மஹான்களுக்காவது இந்த விவாதத்தில் நிஷ்கல்மஷமான நிர்ணயமுண்டாகட்டுமென்று நினைத்தும்.

43. மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளினாலேயே இவ்விஷயத்தில் நமக்கு நிஷ்கல்மஷ நிஷ்கர்ஷம் செவ்வனே யுண்டாகின்றதென்று கீழே பரக்க நிரூபித்திருக்கின்றே மாகையால் அந்த ஸ்ரீஸூக்திகளுக்கு மேற்பட வேறொரு ப்ரமாணம் தேடவும் காட்டவும் ஆவச்யகதை சிறிதுமில்லை.

44. இவ்விடத்தில் ப்ராஸங்கிகமாக மற்றொன்றும் எழுத நேர்கின்றது. நூறு வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிருந்தவரும் பூர்வாசார்யர்களின் அபராவதாரமோ வென்று நினைக்கக்கூடிய பெருமைவாய்ந்திருந்தவருமான (கீர்த்திமூர்த்தி) கோவர்த்தனம் ரங்காசார்யஸ்வாமி வடதேசத்து ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மஹோபகாரகமாக நம் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலவற்றை ஸம்ஸ்க்ருதபாஷையில் தாமே அநுவாதம் செய்தும் தம் அடியார்களை யிட்டு அநுவாதம் செய்வித்தும் பிரசுரம் செய்தருளியுள்ளார். இது ஜகத் ப்ரஸித்தமான விஷயம். அந்த ஸ்வாமிதாமே அநுவாதம் செய்தருளினவை மிகச்சில க்ரந்தங்களே; அவற்றில் தத்வவிபர்யாஸம் புகுவதற்கு ப்ரஸக்தியில்லை. பிறரைக்கொண்டு அநுவாதம் செய்வித்த நூல்களில் பலவகையான விபர்யாஸங்கள் காண்பதுண்டு. அவற்றில் ப்ரக்ருத விஷயத்திற்கு ஸம்பந்தித்த வொன்றை எடுத்துரைக்க வேண்டுவது அவச்யமாகின்றது.

45. தத்வத்ரயரஹஸ்யத்தை மணவாளமாமுனிகளின் வியாக்யானத்தோடுகூட ஒரு அக்ஷரம் விடாமல் பரிபூர்ணமாக ஸம்ஸ்க்ருதாநுவாதம் செய்து தேவநாகராக்ஷரத்தில் இரண்டு தடவை பதிப்பித்திருக்கிறது. இந்த க்ரந்தம் வட இந்தியாவில் வேதாந்த விசாரத பரீக்ஷைக்குப் பாடமாகவும் வெகுநாளாக வைக்கப்பட்டிருக்கின்றது. இதிலுள்ள விபர்யயங் கள் பல பல. ப்ரக்ருதோபயுக்தமானதுதானே இங்குக்காட்டவேண்டும். அதில் அசித் ப்ரகரணத்தில் மாமுனிகள் வாதிகேஸரி ஜீயருடைய தத்வநிரூபண க்ரந்தத்திலிருந்து பங்க்தி களை அடிக்கடி உதாஹரித்து "ஜீயருமருளிச் செய்தார்" என்றருளிச் செய்துள்ளார். அங்கெல்லாம் ஜீயரென்பது * அன்போடழகிய மணவாளச்சீயர் * என்று உபதேசரத்தின மாலையில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அழகிய மணவாளச் சீயரேயென்று நிஸ்ஸந்தேஹமும் நிர்வி வாதமுமானது. அப்படியிருக்க அந்த அநுவாதகாரர் நஞ்சீயரையே ஜீயரென்றதாக மயங்கி



"வேதாந்தியதிபி: தத்வநிரூபணே ப்ரோக்தம்" என்று பலகாலும் எழுதிவிட்டார். தத்வநி ரூபண க்ரந்தம் அத்யாபி உலகில் ப்ரசாரத்திலுள்ளது. வெகு அழகாக அச்சிடப்பட்டு முள்ளது. இது நஞ்சீயருடையதென்று யாரும் சொல்லகில்லார். அகாண்டே புஸ்தாநே ப்ரமித்துவிட்டார். வடதேசத்தார் யாவரும் தத்வநிரூபணம் நஞ்சீயர் ஸாதித்ததென்றே திண்ணமாகக் கொண்டுவிட்டார்கள். நாம் உண்மையை யெடுத்து எவ்வளவு உரைத்தாலும் கொள்ளார்கள். * ஆதம்பரஜநைரநுராகே ஹாஸ்யா: கௌவீநவாநர: * என்றபடியாம்.

46. இவ்விதமாக ஏற்பட்டிருக்கின்ற விபர்யாஸங்கள் அர்வாசீநர்களுடைய க்ரந்தங் களில் அபரிமிதமாகவுள்ளது. ப்ரஸக்தி வந்து விட்டபடியால் முக்கியமான சிலவற்றை யெடுத்துக் காட்டியே தீருகிறேன். லோகோபகாரார்த்தமாகச் செய்யவேண்டிய கைங் கரியங்களில் இது முக்கியமானதென்று அடியேனுடைய அபிநிவேசம். ... (6.)

## —: ஏழாம் அத்யாயம். :—

47. சென்னை ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாரால் (35 வருஷங்களுக்கு முன்பு) ஸம்ப்ரதாய அகராதி யென்றொரு புத்தகம் (500 பக்கங்கள் கொண்டது) அச் சிட்டு வெளியிடப் பட்டிருக்கிறது. அதை ஸங்கலனம் செய்தவர் யாரோ அறியோம். அதிலுள்ள விபர்யயங்கள் எல்லைகடந்தவை. ப்ரக்ருதோபயுக்தமான சிலவற்றையே இங் கெடுத்துக் காட்டுகிறேன். அதில் (பக்கம் 156 ல்) அழகிய மணவாளச் சீயர் என்றெடுத்து "இவர் நம்பிள்ளை சிஷ்யர்" என்றெழுதி கதையுமொன்று எழுதப்பட்டிருக்கிறது. திருவாய்மொழிக்குப் பன்னீராயிரவுரை, தத்வதீபம் முதலான க்ரந்தங்களையும் இவரே பணித்ததாகவும் எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது. இது ஸர்வாத்மநா பொருந்தாத விஷயம். இவர் நம்பிள்ளையினுடைய ப்ரசிஷ்யருடைய சிஷ்யர் என்பது [அதாவது, நாயனாராச்சான் பிள்ளையின் சிஷ்யர் என்று] நிர்விவாதம். உபதேச ரத்தினமாலை வியாக்கியானம் முதலிய வற்றில் ஸுஸ்பஷ்டமாக எழுதப்பட்டுள்ள விஷயமிது. ஆனதுபற்றியே இவருடைய க்ரந்தங்களில் [தத்வதீப தீபப்ரகாசங்களில்] தேசிக ஸூக்திகள் அநேகமாக உதாஹரிக் கப்பட்டுள்ளன. இப்படிப்பட்ட இவரை நம்பிள்ளை சிஷ்யரென்று எழுதுவதும் அதற்கேற்கக் கதைகள் தொடுப்பதும் கண்டால், ஈதென்ன மாயம்! என்று தானே நினைக்கவேண்டும்.

48. அடுத்தபடி அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்றெடுத்து, இவர் பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார் என்று எழுதியுள்ளது சரி; உடனே "இவர் செய் தருளின க்ரந்தங்கள் ஆசார்யஹ்ருதயம் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் முத லானவை" என்றெழுதியுள்ளது. ஆசார்ய ஹ்ருதயகாரரான இவர் திருப்பாவை ஆறாயிரப்படி யருளிச் செய்தவரென்று நாடு நகரமும் நன்கறிந்த விஷயம்; அதை விட்டிட்டு பெரியாழ் வார் திருமொழி வியாக்கியானமிட்டருளினாரென்று அடியோடில்லாததொன்றை யெழுதி வைத்துளது. இன்னமும், எங்களாழ்வான்............ முதலான திருநாமங்களை யெடுத்து எழுதியிருப்பவைகளும் ப்ரமாண வைதேசிகங்கள். ஸம்ப்ரதாயதத்வமறியாதவர்கள் இதையெல்லாங்கண்டால் இப்படியேயன்றோ ப்ரவசநபரம்பரை உலகில் ஊர்ஜிதமாகிவிடும்.

49. உலகமெல்லாம்பரவிய பிரபலமான தடுமாற்ற மொன்று கேண்மின். 1909 ஆம் வருடத்தில் முதலில் அச்சிடப்பட்டு மறுபதிப்புமேறியுள்ள இராமநாதன் டிக்ஷனரி யென்னுமோர் பெருஞ்சுமையான தமிழகராதியில் ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களின் பெயர்களையெடுத்து எழுதியுள்ள விபரீதங்கள் மிக வருந்தத் தக்கவை. (சில காட்டுவோம்.)

(பக்கம் 973ல்) பிள்ளை லோகாசாரியர் என்றெடுத்து, “திருவரங்கத் தந்தாதி, திருவரங்கக் கலம்பகம், அர்த்த பஞ்சகம் முதலிய நூல்களை யியற்றிய வைஷ்ணவதமிழ்ப் புலவர்” என்றெழுதியுள்ளது. இதற்கு நாம் என்ன சொல்லுவது? இது உலகமறிந்த மருளன்றோ.

50. அதில் (பக்கம் 604 ல்) “சிவாக்கிரயோகி” என்றெடுத்து “இவர் தஞ்சாவூரிலே சரபோஜி மகாராஜாவுடைய சபையில் மணவாள மாமுனி யென்னும் வைஷ்ணவச்ரேஷ்டரோடு பதினேழுநாள் வரையில் அவர்கடாவிய வினாக்களுக்கெல்லாம் ஏற்றவாறு விடையளித்துச் சிவபரத்துவம் நாட்டி வரும்போது பதினேழாநாளிரவு சிவாக்கிரயோகி யெழுந்தருளியிருந்த மடத்தில் தீக்கொளுவினர்கள்........” என்றெழுதப்பட்டுள்ளது. மேலே மணவாளமாமுனிகள் என்றெடுத்து “இவரும் சிவாக்ரயோகிகளும் ஒரு காலத்தவர்கள்; இருவரும் தஞ்சாவூரிலே சரபோஜீ மகாராசன் சமுகத்தில் பதினேழு நாள் செய்த சமயவாதப் போரிலே தோற்றவராயினும் இவர் தமிழ்ப் புலமையில் மிகச் சிறந்தவரென்பது இவர் அருளிச்செய்த உபதேச ரத்தினமாலை முதலிய பிரபந்தங்களால் கரதலாமலகமாக விளக்கும்” என்றெழுதப்பட்டுளது. மேலே “வேதாந்தம்” என்றெடுத்து “அத்வைதம்” என்று பொருளெழுதியுள்ளவிவர் எதுவும் எழுதலாம். பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றிய அஷ்டப் பிரபந்தங்களைப் பிள்ளை லோகாசாரியர் பணித்ததாகக் கூசாமல் எழுதியுள்ள விவர் எதுதான் எழுதமாட்டார். இப்படிப்பட்ட புத்தகங்கள் உலகம் பரவி விட்டால் மெய்ம்மைப் பொருள்கள் தங்க இடமுண்டோ?

51. இங்ஙனமாக நாம் எடுத்துக் காட்டவேண்டிய விஷயங்கள் பல்லாயிரமுள. பிராமாணிகர்கள் இந்த நிரூபணங்களைக் கண்டால் ‘யுக்தம், யுக்தம்’ என்று தலைதுலுக்க வேண்டுமே யொழிய, நாம் ப்ரமித்தோ ஆக்ரஹித்தோ எழுதுகிறோமென்று அணுவளவும் சொல்ல வாயெழாது. மத விஷயங்களிலானால் “மதிதெளர்ப்பல்யாத் ந மததெளர்ப்பல்யம்” என்று எதையாவது பதில் சொல்லிக்கொண்டு போதுபோக்கலாம். இந்த விஷயங்கள் அப்படிப்பட்டவையல்லவே. மேலே யெடுத்துக் காட்டிய தமிழ்ப்போகாதியில் சிவாக்ரயோகிக்கும் மணவாளமாமுனிகளுக்குப் பதினேழு நாள் சமயவாதப் போர் நடந்து தோல்வியடைந்த வைஷ்ணவர்கள் யோகிமடத்தில் தீக்கொளுவினர்கள் என்று எழுதப்பட்டுள்ளகதை மகாபிமானத்தினலெழுதியது என்று வைத்துக் கொள்ளலாம். அது உண்மையான கதைதானென்று ஒரு ஸமூஹம் (அல்லது சிலர்) வாதிக்க எழுந்தாலும் எழலாம். திருவரங்கக் கலம்பகம் முதலான பிரபந்தங்களைப் பிள்ளைலோகாசாரியர் இயற்றினரென்று எழுதியிருப்பது கேவலம் மருளொன்றினலன்றோ.

52. அவ்வகராதி கோத்தவர் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தினுட்புகாமையினல் ஏதோ அநவதானத்தினலெழுதிவிட்டார் என்றுவது சொல்லிவிடலாம். இந்த ஸம்ப்ரதாயத்திலேயே தோன்றி இரவும் பகலும் இதிலேயே பழகிவருபவர்களும் வ்யக்திமாறாட்டமாக எழுதிவைத்துப் பிரசுரமும் செய்துவிட்டால் இதனில் மிக்கோரயர்வுண்டோ? திருவயிந்திரபுரத்தில் வாழ்ந்த சதாவதானம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி யென்பவர் ப்ரஸித்தபண்டிதர். தேசிகனருளிச்செய்த ந்யாயபரிசுத்தியை முதன்முதலாக அச்சிட்டபோது அதற்கு மிக விரிவான பூமிகையொன்று இந்த ஸ்வாமி எழுதிச் சேர்த்து வெளியிட்டுள்ளார். அதில் இப்படிப்பட்ட வ்யக்தி விபர்யயங்கள் பல. சில கேண்மின்; “ஸ்ரீ[illegible] [illegible] ஸ்ரீ[illegible] [illegible]” என்று (அதில்



4-வது பக்கத்தில்) உள்ளது. இதனுல் ஷடர்த்த ஸம்க்ஷேபமென்கிற க்ரந்தம் மணக்கால் நம்பியருளிச்செய்ததென்று இவர் தெரிவிக்கிறார். இது மிகத்தவறு, மஹத்தான ப்ரமம் என்று உலகமெல்லாமுரைக்கின்றது. ஷடர்த்தஸம்க்ஷேபக்ரந்தத்திலுள்ள சில பங்க்திகளை தேசிகன் அநேகக்ரந்தங்களில் எடுத்துக்காட்டியுள்ளார். ந்யாயஸித்தாஞ்ஜநம், கத்யபாஷ்யம், ஸ்தோத்ரபாஷ்யம், ரஹஸ்யத்ரயஸாரம் ஆகிய இவற்றில் உதாஹரித்துள்ளார். ஸோமாசியாண்டானருளிச்செய்தது ஷடர்த்த ஸம்க்ஷேபமென்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸுவ்யக்தமாகவெழுதியுள்ளார். அந்த ஸோமாசியாண்டான் உடையவருடைய சிஷ்யகோடியிற் சேர்ந்தவர். மணக்கால்நம்பிக்கு வடமொழியில் என்ன திருநாமமோ அதுவேதான் அந்த ஸோமாசியாண்டானுக்கும். அதாவது ஸ்ரீராமமிச்ரகுரு வென்பது. அதைக்கொண்டு மிகவும் ப்ரமித்து “ஆளவந்தாருடைய ஆசார்யரும் உய்யக்கொண்டாருடைய சிஷ்யருமான ஸ்ரீராமமிச்ரகுருவென்று [சக்குபந்திபோட்டு] எழுதிவிட்டார்.

53. இஃதொன்றோடு போகவில்லை. அதே பூமிகையில் “வாதிகேஸரிநாமா லோகாசார்யாவரஜ:” என்று மெழுதியுள்ளார். வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரென்பவர் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியென்கிறார். இதுவும் மஹாப்ரமம். வாதிகேஸரி யென்பவர் பன்னீராயிரப்படி, தத்வதீபம் தீபப்ரகாசம், திருவிருத்தம் ஸ்வாபதேசவுரை முதலியவையருளிச்செய்த உத்தமாச்ரமி. பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியாரோ அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரென்பவர். இவர்தாம் ஆசார்யஹ்ருதயாதிகள் அருளிச்செய்தவர். இவர் உத்தமாச்ரமியல்லர், நைஷ்டிக ப்ரஹ்மசாரி. வாதிகேஸரியென்கிற விருதும் இவர்க்குக் கிடையாது. எல்லாம் வ்யக்தி ப்ரமமாகவே யெழுதப்பட்டு உலகம் பரவியுள்ளது. எவ்வளவு பரவினாலும் எத்தனையுகமானாலும் உண்மை உண்மையாகவே விளங்கித் தீருமன்றோ. நம் கண்ணில் தென்படுகிற இப்படிப்பட்ட விபர்யாஸங்களையெல்லாம் நாம் லோகோபகாரார்த்தமாகவே ஸமயவிசேஷங்களில் வெளியிட்டுவருகிறோம். இவை சிலர்க்கு அப்ரியமாயிருந்தாலும் நிரூபணங்களில் வாய்திறக்க முடியாதன்றோ.

54. இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருவோம். வார்த்தாமாலை, ஸ்ரீவைஷ்ணவஸமயாசார நிஷ்கர்ஷம் முதலான க்ரந்தங்களில் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளை யென்றே குறித்திருக்கின்றதென்று சிலர் கூறவருவதும் கீழ்க்கண்ட ப்ரபலநிரூபணங்களினால் பயனற்றதேயாம். வார்த்தாமாலைமுழுவதும் பின்பழகியபெருமாள் சீயருடைய ப்ரபந்தமன்று; அவர் தொகுத்தவார்த்தைகளோடு பின்பின்புள்ளார் தொகுத்த வார்த்தைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இத் தன்மை குருபரம்பராப்ரபாவமாறாயிரப்படியினுமுள்ளதாகக் கீழ் நிரூபித்திருக்கின்றோமன்றோ. ஸ்ரீவைஷ்ணவஸமயாசாரநிஷ்கர்ஷப் பிள்ளைலோகஞ்சீயர் அருளிச்செய்ததென்பது அந்த க்ரந்தத்திலேயேயுள்ள பல வார்த்தைகளுக்குச்சேராது. அதில் இடையிடையே “பிள்ளை லோகஞ்சீயர் அருளிச்செய்வர்” என்றுவருவதை நன்குகாணலாமே. பன்னீராயிரப்படி குருபரம்பரையென்பது மிக நவீநம். ஆறாயிரப்படியொன்றே ஆசார்யஸம்மதம். அதிலும் பலபல உத்க்ஷேபப்ரக்ஷேபங்களைப் பெரியார் நிரூபிக்கிறார்கள். ஆனால் அவ்விஷயம் இப்போது அப்ரஸக்தம். ப்ரக்ருத விஷயத்தில் எந்த க்ரந்தத்தை யெடுத்துக்கொண்டாலும் பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததென்று ஸ்தாபிப்பதற்கு அணுமாத்ரமும் ஆஸ்பதம் கிடையாது.

55. முகுந்தமாலை குலசேகராழ்வார் ஸாதித்ததன்று என்று ப்ரஸ்தாவம் வந்தபோது ஒரு மஹான் “ஜ்ஞாநஸாரவியாக்யானத்தில் மணவாளமாமுனிகள் *[illegible]* என்கிற முகுந்தமாலைச்லோகத்தை உதாஹரித்தருளியிருக்கிறாரே” என்று சொன்னார்.

இதனால் அந்தச்லோகம் முகுந்தமாலையிலுள்ளது என்கிற விவ்வளவு விளங்குமேயல்லது, அது குலசேகராழ்வார் ஸாதித்ததென்பதும் விளங்குமோவென்று கேட்டவாறே அவர் திக்குகளை நோக்கினார். அதுபோல விவாத விஷயத்திற்கு ஸம்பந்தப்படாதபடி எதையேனு மெழுதுவது பத்ரபூரணமாத்ரமேயாகும்.

56. உபதேசரத்தினமாலையில் *அன்போடழகிய பாசுரத்தின் வியாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று குறிப்பிட்டிருக்கிறார் பிள்ளைலோகஞ் சீயர் என்று சிலர் காட்டவருவதும் பயனற்றது. அங்குச் சற்று முன்னே பெரியவாச்சான் பிள்ளையென்று எழுதியாய்விட்டபடியாலே ஆச்சான்பிள்ளையென்று அநுநிர்தேசம் பண்ணினது ஒக்குமன்றோ. இதைப்பற்றிக் கீழ் விரிவாகவெழுதினோம்.

57. ''நம்மாழ்வாரை ஆழ்வாரென்று பல விடங்களில் குறிப்பதைக் கொண்டு திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களை நம்மாழ்வார் செய்யவில்லை என்று சொல்லலாம்'' இத்யாதி ப்ரதிபந்திகள் கொடுப்பதானது ப்ராஜ்ஞகோஷ்டியில் விலைச் செல்லுமாவென்பதை ப்ராஜ்ஞர்களே பரிசீலிக்கவேணும். திருவாய்மொழியை நம்மாழ்வாருளிச்செய்தாரென்று பல கோடி நூறாயிரம் பிரமாணங்களினால் தெளியவறிகிறோம். பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததென்று கொள்ள வ்யபதிஷ்டரான ஒரு ஆசார்யருடைய திருவாக்கைக் காட்டினால்போதும் என்றன்றோ நாம் சொல்லுவதுமெழுதுவதும். (வ்யபதிஷ்டரான) என்றது எதற்காக வென்னில்; மணவாளமாமுனிகளுக்குப் பிற்பட்டவர்கள் பலர் பல நூல்கள் பணித்துள்ளார்கள்; அவற்றில் பலவகைப்பட்ட ப்ரமப்ரமாதங்களை நாம் மாத்திரமேயன்று, உலகமெல்லாம் கண்டு கூறுகின்றது. இதனால் நாம் பெரியார்களுக்குக் குறை கூறுகிறோமென்று ப்ராமாணிகர்கள் நினையார்கள். ஈடு முப்பத்தாறாயிரப்படிக்கு அவதரித்துள்ள அடைய வளைத்தானரும்பதம் மஹோபகாரகமென்பதில் ஸந்தேஹமுண்டோ? வெகு அற்புதமான வுரைதான் அது. ஆனாலும் அதிலும் எத்தனையோ தவறுகள் புகுந்துவிட்டதாக ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் நிரூபிக்கும்போது *வ்யாக்யாதாரோ ஹி வாரணீயவசநா:* என்று கைகூப்ப வேண்டியதுதவிர வேறில்லையே. *என்னீர்மை கண்டிரங்கி* என்கிறபாசுரத்தின் ஈட்டில் ஒரு தமிழனுடைய பூர்வபக்ஷத்தை பட்டர் குறுந்தொகையிலிருந்து ஒரு செய்யுளை யெடுத்துக்காட்டிக் கின்ளிக்களைந்ததாக அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. அந்தச் செய்யுளின் ஒரு பகுதியை இருபத்திநாலாயிரத்திலே பெரியவாச்சான்பிள்ளை காட்டினர்; மற்றொரு பகுதியை ஈட்டில் காட்டினர். அதை அரும்பதவுரைகாரர் குறளாக நினைத்ததுமல்லாமல் பாட்டையே வேறாக வெழுதிப் பொருளையும் மாறுபட வுரைத்திட்டார். அதைத் துணைகொண்டு ப்ரவசனம் செய்து போருமவர்கள் நெடுநாளாக அவ்வண்ணமாகவேயன்றோ (இற்றைக்கும் நாளைக்கும்) ப்ரவசநம் செய்து வருகிறார்கள். உலகம் நிறைந்த புகழாளரான மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்கள் வெகு பரிச்ரமப்பட்டுக் குறுந்தொகையென்னுஞ் சிறந்த பழையநூலைப் பதிப்பித்ததனாலன்றோ அது கொண்டு உண்மையுணர நேர்ந்தது. இப்படிப்பட்ட ப்ரமப்ரமாதங்கள் பூர்வாசார்யர்களிடத்தில் தலைகாட்டவும் மாட்டாமலிருப்பதாலன்றோ அவர்களுக்கேற்றம். அந்த ஆசார்யர்களுக்குள்ளும் மணவாளமாமுனிகளையொத்த ப்ராமாணிகர் நபூதோ நபவிஷ்யதி யென்றால் சில அஸூயுக்கள் வயிறெரிந்து நிற்கலாமேயல்லது வேறுண்டோ? அப்படிப்பட்ட பேராசிரியருடைய * முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும் தத்திப்பதித்தாற்போன்ற திவ்ய ஸூக்திகளிலிருந்து கல்வெட்டாக நாம் விஷய நிரூபணம் செய்யும்போது பழநடை விளக்கமென்றும் பெரிய திருமுடியடைவென்றும் வாய்திறக்க வழியுண்டோ?



58. ஜிதந்தாஸ்தோத்ரவியாக்கியானம், மாணிக்கமாலை இவற்றைப்பற்றின விசாரம் தனிப்பட்டது. இவை பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்தவை யென்று நிஷ்கர்ஷிக்கவேணுமானால் இவற்றையச்சிட்டவர்கள் எழுதியிருப்பதா நமக்கு ப்ரமாணமாகும். விரோதபரிஹாரமென்றொரு சுவடியை மணவாளமாமுனிகள் அருளிச் செய்ததாக அச்சிட்டு உலகமெல்லாம் பரவவைத்திருக்கிறார்கள். அதில் ப்ரபந்நர்கள் சிகாபந்தம் வைத்துக்கொண்டால் ஸதாசாரவிரோதம் என்று இத்தகைய அற்புதமான அர்த்தங்கள் உள்ளன. அவையும் ப்ரமாணமே போலும். மணவாளமாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளை யென்று ஸாமாந்ய சப்தத்தால் நிர்தேசிக்கமாட்டாரென்று கண்டறிந்து கூறினால் இதை ப்ரத்யவஸ்தானம் பண்ண விரும்புமவர்கள் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளையே யன்றோ தஞ்சமாகக் கொள்ளவேணும்.

59. நம்முடைய ஸம்ப்ரதாய நூல்கள் நிற்க; உலகமெல்லாம் வாசிக்கப் பிறந்த காவ்யநாடகாலங்காராதி நூல்களில் கர்த்தாக்களை விபர்யாஸம் பண்ணியிருப்பதைப் பற்றி எவ்வளவு ஆராய்ச்சிகள் வெளிவந்திருக்கின்றன? தெரியுமோ? பன்னியுரைக்குங்காற் பாரதமாம். ... .... .... ... ... (7)

## —: எட்டாம் அத்யாயம். :—

60. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியையும் ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியையும் நிர்ணயிப்பதற்கு மற்றொரு முக்கியமான சான்று ஒன்றுள்ளது. வேதாந்த தேசிகனுடைய ஸகலக்ரந்தங்களுக்கும் முன்னே அவதரித்தவை பெரிய வாச்சான்பிள்ளை ஸூக்திகள். அவற்றுக்குப் பின்னே அவதரித்தவை ஆச்சான்பிள்ளை ஸூக்திகள். பெரிய வாச்சான்பிள்ளையின் பெரியதிருமொழி வியாக்கியான பங்க்தியை ரஹஸ்யத்ரயஸாரத்தில் (25) ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் உதாஹரித்துள்ளா ரென்பது ப்ரஸித்தம். "குலந்தருமென்கிற பாட்டுக்கு வியாக்கியானம் பண்ணின அபியுக்தரும் ......என்று நிஷ்கர்ஷித்தார்கள்" என்றது காண்க.

61. ஸ்தோத்ரரத்நத்திற்குப் பெரிவாச்சான்பிள்ளை யருளிய வியாக்கியானத்தைத் திருக்கையில் வைத்துக் கொண்டே தேசிகன் ஸ்தோத்ரபாஷ்யமருளிச் செய்தா ரென்பதும் நிர்விவாதம். பலவிடங்களில் அவருடைய தமிழ்ப் பங்க்திகளை அப்படியப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தியிருக்கிறாரன்றோ. [இதையெல்லாம் அடியேன் இதரக்ரந்தங்களில் விரிவாக நிரூபித்திருப்பதால் இங்கு ஸங்க்ரஹமே போதும்.] ஆச்சான்பிள்ளையினுடைய க்ரந்தங்கள் பெரும்பாலும் தேசிகனுடைய திவ்ய ஸூக்திகளிலுள்ள விஷயங்களுக்கு விடை கூறுகிற முறையிலே அவதரித்திருக்கின்றன. ப்ரக்ருத விவாதாஸ்பதமான பரந்த ரஹஸ்யத்திலுள்ள பங்க்திகளும் இதனை மூதலிக்கும். உபயக்ரந்தங்களையும் ஒருங்கே ஆராய வல்லவர்களுக்கு இந்த நிரூபணமொன்றே ஹ்ருதயங்கமமாகும்.

62. சில க்ரந்தங்களுக்குக் கர்த்தாவைப்பற்றின விசாரம் வந்தால் நிர்ணயிக்க ஸாமக்ரியொன்றுமில்லாமலுமிருக்கும்; ஒன்று கேண்மின்; அதிகரணஸாராவளியில் *வ்ருத்திர் நேதா ஜைமிநேர் வ்யாக்ருதைவ ஷோடசாத்யாய்யா வாஸ்து ஸங்கர்ஷ: காண்டஸ் த்வந்யஹ இதி கதம் தந்த்ரநாமோக்தி:* என்று ஒரு விவாதத்தை யெடுத்துக்கொண்டார்; அதாவது, பூர்வமீமாம்ஸையில் ஸங்கர்ஷகாண்டமுட்பட பதினாறு அத்யாயங்களும் ஜைமிநிமுனிவரே பணித்தவையென்று பகவத்போதாயநர் வ்ருத்தி க்ரந்தத்தில் [ஜைமிநீயே ந ஷோடச

ஷைஷிணை ந என்பதால்] கூறியிருப்பதாகவும், பட்டர் தத்வரத்நாகர மென்கிற க்ரந்தத்தில்— பன்னிரண்டு அத்யாயங்கள் மாத்திரமே ஜைமிநிபணித்தவையென்றும் ஸங்கர்ஷகாண்டம் காசக்ருத்ஸ்நர் பணித்ததென்றும் அருளிச் செய்திருப்பதாகவும் காட்டி இந்த விரோதத்தை எப்படி சமகம் செய்வதென்று தேசிகன் விமர்சித்து, உத்தரார்த்தத்தில் இதற்கு நாம் என்ன பண்ணமுடியும்? என்று நின்றுர். *ஸுதுஷ-ஒஷூஷ-கெள நவயஹிஹ உ-யாவாபித-ம கிம்விடிஹ-ஜா: * இத்யாதி. அப்படி விடக்கூடிய விஷயமன்று ப்ரக்ருத விஷயம். நாம் காட்டியுள்ள ப்ரமாணம் ஒவ்வொன்றும் பேர்க்கவும் பேராதன.

63. நம்பிள்ளை பக்கலிலே கேட்ட அர்த்தங்களையேதான் பெரியவாச்சான்பிள்ளை யும் ஏடுபடுத்தினர்; வடக்குத்திருவீதிப்பிள்ளையும் ஏடுபடுத்தினர்! இவ்விருவருடைய வியாக்யானங்களையும் நம்பிள்ளையருளிச்செயலாகவே சொல்லிவிடலாமாஜனும், பெரியவாச் சான்பிள்ளையருளியது இருபத்தினலாயிரம், வடக்குத் திருவீதிப்பிள்ளையருளியது ஈடுமுப் பத்தாருயிரம்" என்று மணவாளமாமுனிகள் பிரித்து அருளிச் செய்கையாலே கர்த்ருநிர் ணயம் விசிஷ்ய செய்யப்ராப்தமாகிறது. பரந்த ரஹஸ்யத்திலுள்ள அர்த்தங்களெல்லாம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதிக்கக் கேட்டவையேயென்று வைத்துக்கொண்டாலும் க்ரந்த ரூபேண எழுதியவர் ஆச்சான்பிள்ளையேயென்று அறுதியிட வேண்டியதாகிறது.

64. கூரநாராயணஸ்வாமி யென்கிற திருநாமத்தால் முற்காலத்தில் மூன்று மஹ நீயர்கள் விளங்கினர்கள். ஒருவர் ஸுதர்சந சதக மருளிச் செய்தவர்; மற்றெருவர் தைத் திரீய உபநிஷத் பாஷ்யமருளிச் செய்தவர்; வேறெருவர் ஈசாவாஸ்ய உபநிஷத் பாஷ்ய மருளிச் செய்தவர். இந்த வுண்மைகளைப் பல சான்றுகளைக் கொண்டு பெரியார் நிஷ்கர்ஷிக் கிருர்கள். இதில் சிறிதுமாராய்ச்சியில்லாதவர்கள் மேற்குறித்த மூன்று க்ரந்தங்களையு மருளிச் செய்தவர் ஒரு வ்யக்தியேதான் என்று கூறுவதுண்டு. எதிலும் விமர்சம் ப்ரா ப்தமாகிறபோது ஆர அமர ஆராய்ந்து யதார்த்தவமும் தத்துவங்களை வெளியிட்டுவைப்பது அடியேனுடைய பணி.

65. 1926 ஆம் ஆண்டில் அடியேன் ஸுதர்சநசதகத்திற்கு வியாக்யான மெழுதிப் பதிப்பித்தபோது முகவுரையில் இதைப்பற்றின ஆராய்ச்சியை விரிவாகச் செய்து இன்னர் இன்னக்ரந்தம் செய்தருளினரென்பதை நிஷ்கர்ஷித்து வெளியிட்டேன். அதை அப்போது கோயிலில் கடாக்ஷித்தருளின மஹநீயர்கள் "இதுவன்றே அருமையான ஆராய்ச்சி" என்று பல ஸ்ரீமுகங்கள் விடுத்து உகந்தருளினர்கள்.

66. உண்மையில் அடியேன் இத்தகைய விஷயங்களில் பிறருடைய மதிப்புரை கட்கு மகிழ்பவனுமல்லேன், பழிப்புரைகட்குப் பரிதபிப்பவனுமல்லேன். * கற்றேர்கள் தாமுகப்பர் * என்கிற மாமுனிகளின் பாசுரத்தையே நிச்சலும் சிந்தை செய்பவன். "கொள்ளத் துணியிலென்? கோதென்றிகழிலென்? கூர்மதியீர், எள்ளத்தனையுகவா திகழாது என்னெழில் மதியே" என்ற தேசிகன் பாசுரத்தையுமப்படியே.

67. இவ்விஷயத்தில் அடியேன் இவ்வளவு விரிவாக எழுத நேர்ந்த காரணத்தை இனிச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். பரந்த ரஹஸ்ய மென்னுமிந்த க்ரந்தம் இதுவரை பிலும் தெலுங்குலிபியில் இரண்டுமுறை அச்சிடப் பட்டிருந்ததே யொழியத் தமிழ் லிபியில் அச்சிடப்பட்டிருக்கவில்லை. சென்னையில் ஸ்தாபிக்கப்பட்ட ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் மூலமாக இதனைத் தமிழில் அச்சிடவேணு மென்கிற அவா அடியேனுக்குத் தோன்றின



ஸமயத்தில், திருச்சிராப்பள்ளி ஸமீபத்திலுள்ள புத்தூரில் வாழும் (அட்வொகேட்) ஸ்ரீ. உ. வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி யென்பவர் பெரியவாச்சான்பிள்ளையருளிச் செய்த திவ்யக்ரந்தங்களை யெல்லாம் வரிசையாக அச்சிடுவிக்கத் தாம் குதூஹலங் கொண் டிருப்பதை ஸ்ரீமுகங்கள் மூலமாகவும் நேராகவந்தும் தெரிவித்தார், அப்போது இப்பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செயல் என்றே அடியேன் எண்ணியிருந்தபடி யால் முதன் முதலாக இதனையே அச்சிடத் தொடங்கலாமே யென்று தெரிவித்து அந்த ஸ்வாமி தாம் அமைத்துள்ள அச்சுக் கூடத்திலேயே அச்சிடுவதென்று நிச்சயித்துக் காரிய மும் நடந்து முடிவுபெற்றது. தமிழ்லிபியில் மாத்ருகை யெழுதச் செய்து காஞ்சியிலிருந்தே அனுப்பப்பட்டது. அச்சிடும் பாரங்களைச் சோதிப்பதற்கு அடியேனுக்கே அனுப்பவேண்டு மென்கிற வேண்டுகோளும் அப்படியே அந்த ஸ்வாமியினுடைய இசைவும் இருந்தது. ஆனல் முதலில் நான்கு பக்கங்கள் மாத்திரமே ப்ரூப் அனுப்பினர் அந்த ஸ்வாமி. காரியம் துரிதமாக நடக்கவேண்டியிருப்பதனல் ப்ரூப் வந்து போவதனலாகும் தாமதத்தை ஸஹி யாமல் தாமே ப்ரூப் பார்த்து ஜாக்ரத்தையுடன் அச்சிட்டு முடிப்பதாகத் தெரிவித்தார். உண்மையில் அந்த ஸ்வாமி நல்ல விவேகி யாகையாலும் தம் இதரதொழில்களையும் விட்டு இந்த முத்ரண கைங்கரியத்திலேயே ஈடுபட்டு உத்ஸாஹியாய்க் காரியம் செய்ய முன் வந்த படியாலும் அப்படியேயாகுக வென்று அடியேனுமிசைந்தேன். சில மாதங்களுக்குள்ளே க்ரந் தம் அச்சாகிமுடிவு பெற்றது. இதற்கொரு முகவுரை யெழுதியனுப்பவேணுமென்று அந்த ஸ்வாமி இயற்கையான ஸௌஜந்யத்துடன் கோரினர். அப்போதும் இந்த க்ரந்தம் பெரிய வாச்சான்பிள்ளையருளிச்செய்ததன்றென்று அடியேனுடைய ப்ரதிபத்திக்கு விஷயமாகாமை யாலே நெடுநாளாக ஊறியிருந்த ப்ரமத்திற்குத் தகுதியானமுறையில் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்ததாகவே விவரித்தெழுதி முகவுரையை முடித்தனுப்பினேன். அந்த ஸ்வாமி யும் அதை அப்படியே அச்சிட்டு முடித்தார். புத்தகமும் வெளிவந்தது. பலவிடங்களிலும் பரவிற்று. அதன் பிறகு நடந்தது கேளீர்;

68. அடியேனுக்குப் பரமாப்தரும் ஸம்ப்ரதாயத்தில் நன்கு ஆழ்ந்தவரும் ஆராய்ச்சி யில் தலைசிறந்து மஹாவிவேகியுமான ஸ்ரீ. உ. வே. அ. வீ. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் என் பவர் [நெடுநாளாக ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து ஸம்ப்ரதாயக்ரந்தங்களையெல்லாம் அதிகரித்தவர்] இந்தப்புத்தகத்தைப் பார்த்தவுடனே அடியேனுக்கொரு கடிதமெழுதினர்; அதிலுள்ள விஷய மாவது—"அடியேன் தேவரீரோடு நேரில் ஸந்திக்கநேர்ந்த ஒவ்வொரு ஸமயத்திலும் இந்த க்ரந்தத்தைப்பற்றி ப்ரஸ்தாவிக்க நினைத்திருந்தும் அவகாசம் வாய்க்காமலேபோயிற்று; இப்போது எம்பெருமானுகவே அவகாசம் கல்பித்தருளினபடியால் விஜ்ஞாபிக்க விரும்பு கிறேன். அந்யதாவாகத் திருவுள்ளம் பற்றுமலும் இதுவொரு விஷயமாவென்று உபேக்ஷித்து விடாமலும் இதனை முக்கியமான ஆராய்ச்சிக்கு இலக்காக்கிக் கொள்ளும்படி ப்ரார்த்திக் கிறேன். பரந்தரஹஸ்யம் ஆச்சான்பிள்ளையினுடைய க்ருதியேயொழியப் பெரியவாச்சான் பிள்ளையினுடைய க்ருதியன்றென்று..... ஸ்வாமிஸந்நிதியில் அடியேன் கேட்டிருக்கிறேன். அடியேனுடைய மந்தமதிக்குத் தக்கபடி ஸ்வல்பம் ஆராய்ச்சி செய்ததில் அதுதான் உண்மை யென்றும் பட்டிருக்கிறது. பெரியவாச்சான்பிள்ளையின் பங்க்திசைலி இதில் அடியோடு காணவுமில்லையே. இதை தேவரீர் ஆராய்ச்சிசெய்ய எடுத்துக்கொண்டால் உலகுக்குப் பரமோபகாரமாயிருக்குமென்று அடியேனுடைய நம்பிக்கை. நன்றுக ஆராய்ந்து தேவரீர் எப்படி முடிவுசெய்தாலும் அதுவே அடியேனுடைய முடிவாக நிற்குமென்பதில் ஸந்தேஹ மில்லை. ஏதோ பெரியாரிடம் கேட்டிருந்ததை அடியேன் விஜ்ஞாபிப்பவனேயொழிய அதிகப்ரஸங்கியாகத் திருவுள்ளம்பற்றக் கூடியவனல்லேன்." இத்யாதி.

ஷயங்கள் இவை.

69. அப்போதே ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்துத் தேறின விஷயங்கள் இவை. "யதார்த்த வாதீ பஹுஜநத்வேஷீ" என்றுகுமேயென்றெண்ணியும், பெரியவாச்சான்பிள்ளையானாலென்ன? ஆச்சென்ற ஆனியாடியிலேயே நாமிதை வெளியிட்டிருக்கவேண்டும். "யதார்த்த வாதீ பஹு... சான்பிள்ளையானாலென்ன? ஈடு முப்பத்தாறுயிரப்படியை நம்பிள்ளைஸாதித்தாரென்று சொன்னாலென்ன? அது சொன்னாலென்ன? வடக்குத் திருவீதிப்பிள்ளை ஸாதித்தாரென்று சொன்னாலென்ன? அது போல் இதுவும் உஹயமாவி இருக்கட்டுமேயென்று நினைத்தும் இதைப்பற்றி ஒன்றும் எழுதாமலேயிருந்துவிடுவோமென்றே வாளாவிருந்தேன்.

70. ஆனாலும், உ. வே. புத்தூர்ஸ்வாமியினால் பிரசுரம் செய்யப்பட்ட அடியேனுடைய முகவுரையில் எழுதப்பட்டிருந்த வொரு வாசகம் மாத்திரம் *தந்நெ உந: கூஜதி* என்றுப்போலவேயிருந்தது.

71. அதாவது, பிள்ளைலோகாசார்யர் அருளிச் செய்த ரஹஸ்யங்களிற் காட்டிலும் பரந்த ரஹஸ்யமே முற்பட்டதென்று எழுதியிருந்தேன். அது உண்மைக்கு மிகவும் முரணான விஷயம். மஹாபசாரமுமாகிறது. ரஹஸ்யார்த்தங்களை முதன் முதலாகப் பரக்க அருளிச் செய்வதற்குறுப்பான பரமகருணை பிள்ளைலோகாசாரியர்க்குத் தோன்றியதேயன்றி மற்றொருவர்க்கும் தோன்றவில்லையென்று நம்மணவாள மாமுனிகள் முதலான முன்னோர்களின் அநவத்யமான அநுஸந்தானம். திவ்ய ப்ரபந்த வ்யாக்யாந ப்ரபஞ்சநங்களில் பெரியவாச்சான்பிள்ளைக்கும், ரஹஸ்யார்த்த ப்ரபஞ்சநங்களில் பிள்ளைலோகாசாரியர்க்கும் அருட்பெருமை அஸாதாரணமானது. திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலான சில ஆசார்யர்களும் முன்னமே திவ்யப்ரபந்த அர்த்த விசேஷங்களை வெளியிட்டருளினவர்களாயிருந்தாலும் பெரியவாச்சான்பிள்ளைக்குண்டான பெருமை மற்றொருவர்க்கில்லையிறே. அப்படியே, பட்டர் அஷ்டச்லோகி அருளிச் செய்திருந்தும், பெரியவாச்சான்பிள்ளை அதிஸம்க்ஷிப்தமாகவொரு ரஹஸ்யக்ரந்த மருளிச் செய்திருந்தும் இவ்விஷயத்தில் பிள்ளைலோகாசார்யர்க்கே அஸாதாரணமான பெருமையாகும். யதீந்த்ர ப்ரவணப்ரபாவத்தில் பிள்ளைலோகஞ்சீயர்— "மணவாளமாமுனிகள் நம்பெருமாள் ஸந்நிதிக்கு வந்து சேர்ந்ததும் பிள்ளைலோகாசார்யர் திருமாளிகையை நோக்கி யெழுந்தருளி 'ரஹஸ்யங்கள் விளைந்தமண்' என்று அவ்விடத்தை அதிகமாக ஆதரித்து அங்கே யெழுந்தருளியிருந்து"— என்று பணித்துள்ளார். ரஹஸ்யம் விளைந்த மண் என்று மண்ணையும் உகக்கும்படியான பெருமை பிள்ளை லோகாசார்யர் திருமாளிகைக்கிருந்ததென்றால் முதன் முதலாக அவருடைய திருவாக்கிலிருந்தேயன்றோ ரஹஸ்யார்த்தங்கள் வெளிவந்திருக்க ஔசித்யமுள்ளது. உண்மையில் பெரியவாச்சான்பிள்ளையே முதன் முதலாக ரஹஸ்யார்த்தங்களை விபுலமாக வெளியிட்டிருந்தாராகில் அந்தப் பெருமையில் நமக்குச் சிறிதும் அஸூயையுண்டாக ப்ரஸக்தியில்லை. மாமுனிகளின் த்யானத்திலே பெரியவாச்சான்பிள்ளையும் பிள்ளைலோகாசார்யரும் துல்யமான பீடத்திலேயெழுந்தருளியிருக்கிறார்களேயல்லது அவருடைய ப்ரதிபத்தியில் வைஷம்யகந்தமுமில்லை. உபதேசரத்தினமாலையில் அருளிச்செயல் வ்யாக்யாநப்ரஸ்தாவத்திலே பெரியவாச்சான்பிள்ளையைப் புகழ்ந்தார்; ரஹஸ்யப்ரஸ்தாவத்திலே பிள்ளைலோகாசார்யரைப் புகழ்ந்தார். முதன் முதலாக ரஹஸ்யார்த்தங்கள் விபுலமாக விளைந்தது பிள்ளைலோகாசார்யர் பக்கலில்தான்.

72. இதற்கு மாறாக அந்த முகவுரையில் எழுதியிருந்தேனாகையால் அது க்ஷணேக்ஷணே நெஞ்சைப் புண்படுத்திக்கொண்டேயிருந்தது. அதனால் நமது ஆராய்ச்சியின் உண்மையை உலகறிய வெளியிட்டேயாகவேணுமென்கிற தீவ்ரருசி திநேதிநே வளர்ந்துவந்தது. அதனால்



ஸ்ரீராமாநுஜபத்ரிகையின் ஏழாவது ஸஞ்சிகையில் சுருக்கமாக வெளியிட்டேன். அதைக் கடாக்ஷித்த ஸ்ரீமத் புத்தூர் ஸ்வாமி * கோபஸ்ய வசமேயிவாந் * என்னும்படி திருவுள்ளம் மிகவும் கொதிப்படைந்து ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகையில் ஏதேதோ எழுதியுள்ளார். ஆங்கிலத்திலும் ஏதோ அச்சிட்டு அனுப்பினார். தனியாகவும் அடியேனுக்கு அத்யுக்ரமான ஸ்ரீமுகம் ஸாதித்துள்ளார். *ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:* என்ற குடியிலே அடியேன் பிறந்தவனாதலால் எவ்வளவோ விநயமும் நயமும் பொலிய விடையெழுதியும் அது நெருப்பிலிட்ட நெய்யாஹுதிபோல் கொதிப்பு அதிகரிப்பதற்கே ஹேதுவாகின்றது. அதற்காக நாம் உண்மையை வெளியிடாதிருக்கமுடியுமோ?

73. நெடுநாளாக நாம் திடமாக க்ரஹித்திருந்ததை நாமே தவறென்று வெளியிட்டுக் கொள்ளலாமோ வென்று கூசுமியல்வு அடியேனிடமில்லை. "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று தேசிகனே பணிக்கும்போது நாம் எவ்வளவினர்? அடியேன் சிந்தனை செய்து முகபாடமாக வைத்துக் கொண்டிருக்கிற ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஓரிடத்திலும் அடியேனுக்கு இருள் துயக்கு மயக்குகள் கிடையா வென்றும் அவை பிறர்க்கே பெரும்பாலுமுண்டென்றும் செருக்குக் கொண்டிருந்த காலமுமுண்டு. ஒவ்வொரு பெரியார் ஒவ்வோரிடங்களில் தத்துவமுணர்த்த, ஐயோ! ப்ரமித்திருந்தோமேயென்று மிகவும் அநுசயித்து ஸ்வாத்மாவைத் திருத்திக்கொண்டு ஆனந்தித்து வருபவன் அடியேன். இதைச் சிறிது விவரிக்கிறேன்.

74. பகவத்கீதைக்கு மணவாளமாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியானமாக ஒரு ஸம்ஸ்க்ருத வ்யாக்யானம் அஸ்மதாசார்யரான ஜகத்விக்யாத கீர்த்திமூர்த்தி, ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கர, அனந்தாசார்ய ஸ்வாமியினால் தேவநாகரலிபியில் முப்பது வருஷங்களுக்கு முன்பு முத்ரணம் செய்யப்பட்டது. அப்போது அடியேன் அந்த ஸ்வாமிக்குப் பாதச்சாயையாகவும் பாதரேகையாகவும் தக்ஷிணபாஹுவாகவுமிருந்து அந்த முத்ரணகைங்கர்யத்தில் ஸஹயோகியாயிருந்தேன். அந்த க்ரந்தம் மாஸ ஸஞ்சிகையாக வெளியிடப்பட்டுவந்ததனால் அதைப்பார்த்த சில பெரியார்கள் "இது மணவாளமாமுனிகளின் ரசனையாகப் புலப்படவில்லையே; வேறொருவருடைய க்ருதியாக இருக்கவேணுமே" என்று தெரிவித்தார்கள். அதையெல்லாம் மறுத்து விபுலமான அவதாரிகை யெழுதி வெளியிட்டதுண்டு. பிறகு ஒரு ஸமயத்தில் திருநாராயணபுரம் விடைகொண்டிருக்கையில் அங்கு மஹாவித்வத் ஸார்வபௌமர்களாக யெழுந்தருளி யிருந்த (ஜகத்ப்ரஸித்த.) குப்பண்ணஸ்வாமியும் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியும் இதை ப்ரஸ்தாவித்து அங்கிருந்த இரண்டு ஓலை ஸ்ரீகோசங்களைக் காட்டியருளி, மணவாளமாமுனிகளுடைய திருப்பேரனாரும் நக்ஷத்ரமாலிகாதிகள் அருளிச்செய்தவருமான ஜீயர்நாயனார் அருளியதே அது என்பதை நன்கு ஸ்தாபித்தருளினார்கள்.

75. அப்போது, அயோத்யா ராமாநுஜஜீயர்ஸ்வாமி ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்தார். அவரிடத்தில் இதை விஜ்ஞாபித்தேன். அந்த ஸ்வாமியும் மிகமிக ஆமோதித்துத் தமது மடத்தில் சேகரித்து வைத்திருந்த தாளகோசத்தையும் எடுத்துக்காட்டியருளினார். அதன் பிறகும் நாம் கொண்டதுவிடாமையென்கிற துர்க்குணத்தை வளர்க்கலாகாதென்று துணிந்து ஸ்வாசார்ய ஸந்நிதியிலும் இதை விசதமாக விஜ்ஞாபித்தேன். அவரும் உகந்தருளினார். ஆத்ம ஸாக்ஷ்யத்திற்கு வஞ்சனையில்லாதபடி இதை உலகறிய வெளியிடுவதற்கு அநுமதிதந்தருளவேணுமென்று பிரார்த்தித்து ஸ்வாமியின் நியமனத்தைப் பெற்று மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் விபுலமாக எழுதி வெளியிட்டேன்.

76. பிறகு அடியேன் மணவாளமாமுனிகள் வைபவம் வெளியிட்டபோது அதில் (பக்கம் 43-ல்)—

"சில ஆண்டுகட்கு முன் காஞ்சீ ஸுதர்சந அச்சுக்கூடத்தில் தேவநாகர லிபியில் மாமுனிகளருளிச் செய்ததாக ஒரு வியாக்கியானம்.........அஸ்மதாசார்ய பாதரால் வெளியிடப்பட்டிராநின்றது. இருந்தாலும் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்த காலத்தில் அது மாமுனிகளருளிச் செய்ததன்றென்றும் மாமுனிகளுக்குப் பிற்பட்டவரான அபிராமவராசார்யரால் பணிக்கப்பட்டதென்றும் தேறிற்று........"

என்றெழுதி வெளியிட்டிருப்பதை நாடு நகரமும் நன்கறியும். உண்மை உள்ளத்தில் பட்டு விட்டால் வீண்பிடிவாதங்கொண்டு தத்துவத்தை யொளித்து உலகை வஞ்சிக்கு மியல்வு அடியேனிடமில்லை என்பதை இத்தகைய பல விஷயங்களால் பிராமாணிகர்கள் அறிந்தே யுள்ளார்கள். இந்த ப்ரகரணத்தில் இவ்விதமாக அடியேன் தெரிவித்துக்கொள்ளவேண்டிய உண்மைகள் பலவுண்டு. எல்லாம் அடுத்த நூல்களில் க்ரமேண வெளிவந்துலவும்.

77. ஆனாலும் சில சிறுவிஷயங்களை இங்கு ப்ரஸங்காத் விஜ்ஞாபிக்கிறேன். வெகு நாளாக க்ரஹித்து ப்ரவசநமும் செய்து கொண்டிருந்தபாடங்களில் பெரியார்கள் உண்மை யுணர்த்தத் தெளிந்து பரமஸந்தோஷத்துடன் பாடங்களைமாற்றிக்கொண்ட இடங்கள் சில வற்றை விஜ்ஞாபிக்கிறேன். ஸுந்தர பாஹுஸ்தவத்தில் முடிவில் * விஜ்ஞாபநாம் வநகிரீச்வர * என்கிற ச்லோகத்தில் * ஸ்ரீரங்கதாமநி யதாபுரமேஷஸோஹம் * என்கிறபாடமே புத்தகங் களில்கண்டது; அதில் ஒரு அநுபபத்தியும் தட்டாமையாலே அப்படியே பாட ப்ரவசநங்கள் நடந்துவந்தன. ஒருகால் ஸ்ரீ உவே ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமியின் க்ரந்த மொன்றில் ".......யதாபுரம் ஏகதோஹம்" என்று உதாஹரித்திருந்ததைக் கண்டு இது தான் ஆழ்வானுடைய திருவாக்கில் அவதரித்த பாடமாயிருக்கத்தகும் என்று நிச்சயித்து க்ருதஜ்ஞதையுடன் அப்பாடத்தையே பற்றினேன்.

78. ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் * கார்யேஙந்தே ஸ்வதநுமுகத: * என்கிற ச்லோகத்தில் ஈற்றடி * ஸைவேசாநாத் அதிசயகரீ ஸோர்ணநாபௌ விபாவ்யா * என்றே எங்குங்கண்டபடியால் இப்படியே பாடங்கொண்டு ஒருவாறு வியாக்கியானமும் எழுதி அச்சிட்டுவிட்டேன். நாச்சியார் திருமாளிகையிலெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ.உவே. விஞ்சிமூர் ஆழ்வார்ஸ்வாமி இவ்விடத்தில் ஒரு பாடவுண்மையைத் தெரிவித்தருளினர்; ஸைவேசாநாத் அல்ல; ஸைவைசாநாத் என்பதே பாடம்; இங்கு ஈசாநாத் என்று பதமல்ல; ஐசாநாத் என்று பதம்— என்று உபபத்தியோடு தெரிவித்தார்; அப்படியேதான் பட்டர் அருளிச் செய்திருக்க வேண்டுமென்று தலைவணங்கி யிசைந்தேன்.

79. பெரிய திருமொழியில் (9—3—1.) * தன்னை நைவிக்கிலேன் * என்றே உலகமெல்லாம் ஓதி வருகிறது. அடியேனும் அப்படியே பாடங்கொண்டு ஸ்வகீய திவ்யார்த் ததீபிகையுரையும் வெகு விரிவாக எழுதி அச்சிட்டுவிட்டேன். இங்கு நைவிக்கிலேன் என் பது பாடமல்ல; நைவிக்கி லேன் என்றுபாடம்; "என்னை நைவித்தானென்று தன்னை நைவித்தால் பின்பு ஆருண்டு?" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்திருப்பதாலும், மேற் பாசுரங்களில் "உருகி நெஞ்சே நினைந்திங்கிருந்தேன்?" "எள்கி நெஞ்சே நினைந்திருங்கிருந்தேன்" என்றிருப்பதாலும் இம்முதற்பாசுரத்திலும் "தன்னை நைவிக் கில் என்?" என்றே பாடமென்று ஸமீபகாலத்தில் ஒரு சிறுமாமனிசர் தெரிவித்தார்;



"நைவிக்கி லேன்" என்ற பாடத்தில் அவ்வளவாக அநுபபத்தி தோன்றுவிடினும் ஆழ்வார் திருவாக்கில் இப் பாடமேதான் அவதரித்திருக்குமென்று ப்ரதிபத்தியுண்டாகி க்ருதஜ்ஞதை யுடன் ஆதரித்து வருகிறேன்.

80. திருநெடுந்தாண்டகத்தில் * பொன்னானாய் பாசுரத்தில் "குணபால மதயானாய்" என்கிற விடத்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் அடியேன் சிறிது ப்ர மித்து ஸ்வகீய திவ்யார்த்ததீபிகையில் "ஸ்ரீராஜமன்னார் ஸந்நிதியிலுள்ள மன்னனார் பரமான வியாக்கியானமுமுண்டு" என்று எழுதிவிட்டேன்; அங்குப் பெரிய வாச்சான்பிள்ளை விவக்ஷித்தது ராஜமன்னார் ஸந்நிதியன்று, காட்டுமன்னார்ஸந்நிதி—என்று பெரியார் தெரிவித்தருள, ஒக்குமென்றிசைந்து திருத்திக் கொண்டேன்.

81. ஸுக்ருதவசாத் உள்ளத்தில் உண்மை தோன்றினாலும் "நெடு நாளாக ஆதரித்ததொன்றை எதுக்காகத் தவறென்று இசையவேண்டும்?" என்றே வீண்பிடி வாதங்கொண்டு போராடுவார் பலருளர் அன்னவர்களின் திரளில் அடியேனுக்கு ஒரு நாளும் ப்ரவேசமில்லை. இன்னரால் இன்னது திருத்திக் கொண்டேனென்று நூல்களி னிடையே எழுதி வெளியிட்டு விடுவது மியல்பு.

82. 'பரந்த ரஹஸ்ய மருளிச் செய்தவர் பெரியவாச்சான்பிள்ளை யல்லர்' என்று அடியேன் எழுதி வெளியிட்டது கண்டு மேற்குறித்த புத்தூர் ஸ்வாமி தன்னிடத்தில் ஏதோ மாத்ஸரியமுண்டாகி தத்பரீவாஹரூபமாக இப்படி யொரு விபரீதவாதத்தை அடியேன் கிளப்பி விட்டதாக அந்யதாக்ரஹித்துச் சீற்றத்தின் எல்லையிலே நின்று ஏதேதோ எழுதி யருள்கின்றார். அவற்றுக்கும் சுருக்கமாக விடையிறுத்து உபஸம்ஹாரம் செய்கிறேன்.

## உபஸம்ஹாரம்.

83. "ப்ராசீனர்களான பெரியோர்கள் பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை யருளியதென்று சொல்லியிருக்கும்போது அதற்கு மாறாகச் சொல்ல நவீநகாலப்பெரியோர் களுக்கு என்ன அதிகாரமிருக்கிறது?" என்கிறார்இவர். பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்ததென்று ப்ராசீநரான பெரியோர் ஒருவரும் எழுதியிருக்கவில்லை; வ்யபதிஷ்டரான ஆசார்யஸார்வபௌமர்கள் அப்படி ஒரு மூலையிலாவது எழுதியிருந்தால் எடுத்துக்காட்டி அடியேனை அடிமைப்படுத்திக்கொள்ளலாம் என்பதே இதற்கு விடை.

84. "ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியார் யாரென்று வெளியிடுவாரா?" என்கிறார். அப்பெரியாரை இந்நூலில் வெளியிடுவதற்கு முந்தியே கடிதமூலமாகவும் இவர்க்குத் தெரிவித்தேன். "இப்பெரியார் உத்போதநம்பண்ணித் தெளியவேண்டிய அள வுக்கா தேவரீர் வந்துவிட்டீர்?" என்று பரிஹாஸமான பதில் எழுதியுள்ளார். யாரிடத்தில் என்ன சரக்கு எவ்வளவிருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளவொட்டாமல் மறைப்ப தன்றோ அஸூயை. கோயிலில் நெடுநாள் ஆசார்யபீடம் வஹித்திருந்த கீர்த்திமூர்த்திகளான மெய்யுவாசார்யஸ்வாமி ஸந்நிதியிலும் பஹுகுடும்பி ஸ்வாமி ஸன்னிதியிலும் உபயவேதாந் தங்களும் பலகால்கேட்ட விமர்சகுசலரான அப்பெரியாரை இவர் இகழ்வதனால் அவர்க்கு வருவதொரு ஹாநியில்லை. பெரியார்களிடத்தில் தாம் கேட்டிருந்ததொன்றைத் தெரிவிப்ப தற்கு B. A., B. L., தேர்ச்சிபெறவேணுமோ? அட்வொகேட் பட்டம் பெறவேணுமோ?

85. "பரந்தரஹஸ்யம் மறுபதிப்புப்போடவேண்டியதின் அவசியம் நமக்கு விளங்க வேயில்லை" என்றெழுதி, மேலே சில இதிஹாஸங்கள் எழுதியுள்ளார்; இச்சிறுவிஷயங்களுக்கு

விஷயமாயிருப்
நாம் பதிலெழுத அவசியமில்லையாயினும் அந்த ஸ்வாமிக்கு அவையே பெரிய
பதால் அவற்றினுண்மையையும் சுருக்கமாகத் தெரிவிக்கிறேன். அச்சுக்கூடம் இவருடை
யதானாலும் பதிப்புரிமை இருவர்க்கும் ஸாதாரணம் என்கிற நிஷ்கர்ஷத்தோடுதான் இவரு
டைய அச்சுக்கூடத்தில் இது அச்சிடத்தொடங்கியது. இவரிடம் நாம் நூறு ப்ரதிகளை
விலைக்கு வாங்கிக்கொண்டோமென்பது நீதிநன்னெறி வார்த்தையன்று. அச்சுத்தாள்களை
முன்னாடியே நாம் அனுப்பிவைத்தோம். 600 பிரதிகள் அச்சிட்டு ஸமபாகமாகப் பங்கிட்
டுக்கொள்வதென்கிற ஏற்பாட்டுமுறையில் காரியம் நடந்தது. எவ்வளவுபணம் இங்கிருந்து
தரவேணுமென்கிற சர்ச்சையும் முதலிலேயே நடந்ததுண்டு. பரந்தரஹஸ்யமொன்றேயல்
லாமல் காலாபிரவியாக்யானங்களும் அடைவே அச்சிட்டு வருவதென்றும், ஒவ்வொன்றிலும்
600 பிரதிகள் அச்சிடுவதென்றும் 300 பிரதிகளுக்குரிய அச்சுத்தாள்களை நாம் கொடுத்து,
அச்சிடுவதற்காகுஞ் செலவிலும் பாதிபாகம்கொடுத்து 300 பிரதிகளை நாம் பெற்றுக்
கொள்வதென்றும், சோதிக்கிற பணியை நாம் ஏற்றுக்கொள்வதென்றும், அவருக்கு அதீன
மாகிற 300 பிரதிகளில் ப்ரகாசகஸ்தானத்தில் அவர் நிற்பதென்றும், நமக்கு அதீனமாகிற
300 பிரதிகளில் ப்ரகாசகஸ்தானத்தில் நாம் நிற்பதென்றும் சில பேச்சுகள் நடந்து முடிந்
தன. இதற்குத் தக்கபடியே நாம் நடந்து கொண்டோம். முடிவில் குழப்பம் ஏற்பட்
டது. அச்சுக்கூலியை மிகவும் அதிகப்படுத்தி அதிகமாகவே தரவேணுமென்று விரும்பினர்.
60 பக்கங்களில் முடிந்த பரந்த ரஹஸ்யத்திற்கு அச்சுக்கூலிமாத்திரம் ஸொந்த அச்சுக்கூட
முடையார்க்கு 70, 80 ரூபாய்க்குமேற்பட ஆவதற்கு மார்க்கமில்லை. ஆனால் அந்த ஸ்வாமி
தொழில் முறையில் இதர அச்சுக்கூடத்தவர்கள் சொல்லக்கூடிய கணக்குக்கும் அதிகமாகக்
கணக்கிட்டுக் கடினமானமுறையில் வ்யவஹரிக்க ஆரம்பித்தபடியால் வைரஸ்யமுண்டா
யிற்று. அதையெல்லாம் இங்கு விவரிப்பதில் உலகுக்குப் பயனொன்றுமில்லை.

86. அடியேன் இதுவரையில் நூற்றுக்கணக்கான பல புத்தகங்கள் அச்சிட்டிருக்
கிறேன். ஒருவரோடு சேர்ந்து கூட்டுத்தொழில் இதுகாறும் செய்ததில்லை. முன்பின்னறி
யாமல் இவரோடு அது செய்ததன்பயனாக வீண்பரிதாபம் நேர்ந்தது. புஸ்தகப்ரசுரகர்த்
தாக்களின் பெயரையும் இடத்தையும் புத்தகத்தின் முடிவிலும் டைட்டல்தாளிலும் போடுவது
வழக்கமேயல்லது புத்தகத்தின் இடையிடையிலும் போடுவது இதுவரை எங்குங்கண்டதில்லை.
*இமவத்தொடங்கி இருங்கடலளவுமுள்ள நாடுகளில் ஒரு நாட்டிலும் காணாத அதிசய
மாக இந்த ஸ்வாமி—த்வயப்ரகரணம் முடிந்து சரமச்லோக ப்ரகரணம் தொடங்குமிடை
யில் ஸகல ஸ்வாமிகளும் விவேகிகளும் அருவருக்கும்படி சிலவற்றைச் சேர்த்து அச்சிட்டார்.
இருவரும் முதலில் செய்துகொண்ட ஸங்கேதத்தின்படி ஒவ்வொரு பாரமும் இவர் நமக்கு
ப்ரூப் அனுப்பி வந்திருந்தாராகில் இந்த அஸந்தர்ப்பத்திற்கு அவகாசமேயிராது. அப்போதே
இது அற்றிருக்கும். இப்படி யெல்லாம் சில ஸ்வதந்த்ரச் செயல்கள் செய்ய நினைத்தே இவர்
நமக்கு ப்ரூப் அனுப்புவதை நிறுத்திக்கொண்டார் என்று பிறகு நிச்சயிக்க நேர்ந்தது.

87. இதை அடியேன் அப்போதே ஆக்ஷேபித்து இவர்க்குக் கடிதமெழுதினேன்.
இவரும் ஏதோபதில் எழுதினர். அஸந்தர்ப்பமான அந்த இடத்தைக் காகிதமொட்டி நாம்
மறைத்தோமென்று இப்போது அவத்யம் கூறுகிறார். இப்புத்தகத்தை இவரிடமிருந்து
நேராக வாங்கிக்கொண்டவர்களும் அஸந்தர்ப்பமானவதை மறைப்பதுமழிப்பதுமே செய்
துள்ளார்களென்னுமுண்மையை இவரறிந்துவைத்தும் இப்படி எழுதுவது உசிதமன்று.

88. ஆகக் கீழே விவரித்த சில காரணங்களால் வைரஸ்யம் வலிதாகவிளைந்தபடி
யால் இவரிடம் 300 பிரதிகள் பெற்றுக்கொள்ளாமல் 100 பிரதிகள் மாத்திரமே பெற்றுக்
கொண்டோம். அதுவும் முன்னாடி அச்சுத்தாள்கள் கொடுத்திருந்தபடியால்.



89. இத்திவ்யக்ரந்தம் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததன்று என்கிற தத்து
வம் அப்போதே விமர்சனத்திற்கு வந்திருந்தால் இவ்வளவு கஷ்டங்களுக்கு இடமிராது.
ஸ்ரீகோசம் வெளியான சில நாள்களுக்குப்பிறகே விமர்சாவகாசம் கிடைத்தபடியால் வேறு
பதிப்புச் செய்துகொள்ள நேர்ந்தது.

90. இப்போது புத்தூர்ஸ்வாமியின் ஹ்ருதயத்தில் பொங்கியெழுகின்ற கோபாக்
னிக்கு உண்மையான ஹேது எதுவென்று தடஸ்தர்கள் பரிசீலிக்கவேணும். பரந்தரஹஸ்யம்
தான் அச்சிட்டு வெளியிட்டதாயிருக்க, அதை நாம் ஸத்க்ரந்த ப்ரகாசநஸபையின் வெளி
யீடாகப் பிரசுரம் செய்தது, இந்த க்ரந்தம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததன்றென்று பரவ
விட்டது, மறுபதிப்புச்செய்தது—ஆக இவை ஹேதுக்களாகத் தெரியவருகின்றன. இவற்
றுக்குச் சுருக்கமான பதில் கேண்மின்;—

91. தாம் ஏகதேசமாக அச்சிட்டுவிட்டதாய் நினைப்பது நியாயமன்று. 100 பிரதி
களை நாம் விலைக்கு வாங்கிக் கொண்டு வேறுவிதமான டைட்டிலிட்டுப் பிரசுரம் செய்துவிட்
டதாக முறையிடுவதும் முறையன்று. முன்னாடியாகவே நாம் அச்சுத்தாள்களையனுப்பி
யிருந்தோமென்பதை இவரும் இசைகிறபடியால் விலைக்குப் பெற்றோமென்பது அஸங்கத
மாயிற்று. ஆரம்பத்தில் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி வேறுவிதமான டைட்டிலிட்டுப்
பிரசுரஞ் செய்துக்கொள்ள நமக்கு உரிமையுள்ளதாகவே திண்ணமாக வெண்ணி நாம்
செய்திருக்கிறோம். இது ரஹஸ்யமாக நடந்திருப்பதன்றே. உலகறியப் பலவூர்களில்
பிரசுரஞ்செய்ததன்றோ.

92. இவருடைய பெயரையும் தொழிலையும் அதில் முடிவில் உலகமறிந்த இங்கிலீஷில்
வெளியிட்டே யிருக்கிறது. அதற்கு ஒரு லோபமுமில்லை. நாமெழுதிய முகவுரையிலுமுள்ளது.
அது நாடெங்கும் பரவியது. கஜெட்டிலும் பிரசுரமாகியது. அஸந்தர்ப்பமான விடங்களில்
மாத்திரம் அநாவச்யகமென்றும் அஸமஞ்ஜஸமென்றும் மறுக்கப் பட்டதேயொழிய இவ
ருடைய பெயரே அதில் கூடாதென்று நாம் கருதவுமில்லை; அப்படிச் செய்யவுமில்லை.

93. பரந்தரஹஸ்யம் தெலுங்குப்ரதியைப் பார்த்துத் தமிழ் லிபியில் அச்சுக்குரியதாகப்
பிறரைக்கொண்டு எழுதவித்து அனுப்பினதற்குப் புத்தூர் ஸ்வாமி பண மனுப்பியதாகத் தெரி
விப்பது உண்மையே. நாம் நமது கையால் எழுதியனுப்பினோமல்லோம். வெகுச்ரமப்
பட்டுப் பிறர் எழுதியதேயது என்பதை இவரும் இசைந்துள்ளார். அதற்காகக் கொடுக்க
வேண்டிய தொகையில் ஒரு பகுதியே இவர் கொடுத்தது. முழுப்பணமும் இவரே கொடுத்து
விட்டதாகச் சொன்னாலும் அதனால் என்னாகும்? ப்ரூப் சோதனை செய்கிற பொறுப்புக்கு
நாம் பணம் பெற்றுக் கொண்டோமென்று கூறுகிறாரல்லரே.

94. இது நடந்து ஒருவருஷமாகிறது. அப்போதே இவருமறிவர். ஒருவருஷ
மாக இதைப்பற்றி இவர் ஆக்ஷேபித்தவரல்லர். 'பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த
க்ரந்தமன்றிது' என்று நாம் வெளியிட்டதிலிருந்தே இவர்க்குத் தாபம் ஏற்பட்டுளது. உலக
முய்ய உண்மையைத் தெரிவித்ததற்காக ஒரு விவேகி தபிக்கலாகுமோ?

95. அடியேன் வெகு ஆர்ஜவத்துடன் எழுதியிருக்கிற இச்சிறுநூலை ஸாவதான
மாகக் கண்டவுடனே இவர் கலக்கம் நீங்கி நல்லதெளிவு பெறுவாரென்றே எனது நம்
பிக்கை. ஆனால் "விட்டிடுதுமேல் எளியமாதும்" என்று கும்பகரணன் கூறியதாகக் கம்பர்
கூறியபடி பிடித்தபிடியை விடுவதென்பது எளிதில் விளையக்கூடியதன்றாதலால் "இதெல்லாம்
அஸங்கதமே" யென்று சொல்லவும் எழுதவுங்கூடுமிவர். தாராளமாக எழுதட்டும். அது
தான் வீரர்களுக்கு உற்றது.

96. தாம் எழுதும் நூலை ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஆசார்யஸார்வபௌம ஸ்ரீவானமாமலைஸ்வாமி போன்ற பேராசிரியர்களுக்கனுப்பி அப்பெரியார்களுடைய ஆமோதனத்தைப் பெற்று "பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளையதே" என்று நிரூபித்தருளட்டும்; அப்போது இவரை அடிபணிந்து நிற்போம்.

97. 400 பிரதிகள் தம்மிடம் மிச்சப்பட்டிருப்பதாகவும் நாம் மறுபதிப்புச் செய்ததனால் அவை விலை யாகாதபடி நஷ்டம் ஏற்படுவதாகவும் ஏதோ எழுதுகிறாரிவர். இதற்கு, நாம் நாடு நகரமும் நன்கறியத் தெரிவிப்பது கேண்மின்;— நமது இச்சிறு நூலால் இவர் தெளிவு பெற்று முன்னைய டைட்டலை மாற்றி ஆச்சான்பிள்ளையருளிச் செய்ததென்றே பிரசுரம் செய்து தருவாராகில் அத்தனை ப்ரதிகளையும் நாமே விலைதந்து வாங்கிக் கொள்வோம். இல்லையா, "பெரியவாச்சான்பிள்ளையதே" என்று ப்ராமாணிகர்கள் இசைய ஸ்தாபித்து விடட்டும்; அப்போதும் அத்தனை பிரதிகளையும் விலை தந்து வாங்கிக் கொள்வோம். எதற்காக இவர் நஷ்டப்படவேண்டும்.

98. "பரமபவித்திரமான க்ரந்தங்களைப் பதிப்பிக்குமிதில் கூடவா காமக்ரோதங்கள்" என்று இவர் எழுதுவது பொருளற்ற பேச்சு. உள்ளதை உள்ளபடி நாம் தெரிவித்தால் இதைக் காமக்ரோத கார்யமென்பது நீதியோ? ஸ்ரீ. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியையும் காமக்ரோத பரவசரென்று இவர் வசை கூறலாம். அடுத்தபடி அதுவுமாகும்.

99. இவர் பெரியவாச்சான்பிள்ளையின் திவ்யக்ரந்தங்களை விடாமுயற்சியுடன் அச்சிட்டு வெளியிடுவதில் நமக்குப் பரமஸந்தோஷமேயல்லது அழுக்காறு சிறிதுமில்லை. இதை நாம் அநுஷ்டானத்திலன்றோ காட்டவேணும். இவர் அச்சிடும் உண்மையான பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை யெல்லாம் நம் தலையால் சுமந்து நாமே விற்பனை செய்து இவர்க்கு லாபம் விளைவிப்போமென்பதை நம் வாழ்நாளுள்ளவரையில் ஆசரணையில் காட்டுவோம்.

100. இப்போது நாம் பரந்த ரஹஸ்யத்தை மறுபதிப்புச் செய்ததுபற்றி இவர் தாபங்கொள்ளச் சிறிதும் நியாயமில்லை. ஏனெனில்; நாம் அச்சிட்ட பரந்த ரஹஸ்யம் வேறு; இவர் அச்சிட்ட பரந்த ரஹஸ்யம் வேறு. பெரியவாச்சான்பிள்ளை பணித்ததை இவர் அச்சிட்டார்; ஆச்சான்பிள்ளை யருளியதை நாம் அச்சிட்டோம். இதனை இவர் நன்கறிக.

101. ததாஹி. பரந்தரஹஸ்யத்தில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் புத்தி த்யாகமா? ஸ்வரூபத்யாகமா? என்று விகல்பித்து இரண்டுமாகலா மென்று வெகு அழகாக நிரூபித்தருளுகிறார் ஆச்சான்பிள்ளை; ஸர்வ தர்மாநுஷ்டாநம் செய்துகொண்டே யிருக்கையில் ஸர்வதர்மஸ்வரூபத்யாக மென்னலாயோவென்னில்; "அநுபாயத்வபுத்தியுக்தமான இந்த தர்மத்திற்காட்டில் உபாயத்வபுத்தியுக்தமான அந்த மோக்ஷஸாதந தர்மம் தர்மாந்தரமாகையாலே தர்ம ஸ்வரூபத்யாகமென்னக் குறையில்லை" என்று அருளிச் செய்துள்ளார். அந்தக் கணக்கிலே, பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்ததென்னும் ப்ரதிபத்திக்கு ஆஸ்பதமான பரந்த ரஹஸ்யத்திற்காட்டில் ஆச்சான்பிள்ளையருளிச் செய்ததென்னும் ப்ரதிபத்திக்கு ஆஸ்பதமான பரந்த ரஹஸ்யம் வேறுபட்ட க்ரந்தமே யாமென்பது ஸம்ப்ரதிபந்நமாகையாலே இவருடைய தாபம் ஸர்வாத்மநாபி அஸ்தாநே யென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டதாயிற்று.

## முடிவான விண்ணப்பம்.

102. இச்சிறு நூலில் நாம் எழுதியுள்ள விஷயங்களை இரண்டுபகுதியாகப் பிரிக்கலாம். "பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததன்று" என்பதை ஸப்ரமாணமாகவும் விரிவாகவும் நிரூபிப்பது ஒரு பகுதி. சென்றவருஷத்தில் தமிழ்லிபியில் அச்சிடுவித்த பரந்தரஹஸ்யத்தின் அச்சுஸம்பந்தமாகப் புத்தூர்ஸ்வாமி எழுதியுள்ளவற்றுக்கு பதில் தெரிவிப்பது மற்றொரு பகுதி. ஆக இவ்விரண்டு பகுதிகளில் முதற்பகுதியே முக்கியமானது. இரண்டாவது பகுதியில் நாம் எழுதுவதெல்லாம் அநீதியானதென்று அவர் பிரபலமாக நிரூபித்து விடுகிறாரென்றே வைத்துக்கொள்வோம்.

103. அதனால் நமக்கு யாதொரு அவஜ்ஞையுமில்லை. அதில் அவர்க்கு ஏதோ பெருத்த நஷ்டம் ஏற்படுவதற்கு நாம் காரணமாகின்றோ மென்பதே முக்கியவாதமாதலால் எவ்விதமான நஷ்டமும் ஈஷத்தும் நேராதபடி நாம் நடந்துகொள்ளத் தட்டில்லை யென்பதை முடிவாகத் தெரிவித்திருக்கிறோம்; அது சபதபூர்வகமான சொல்லே யென்று நம்பி அவ்விஷயத்தில் சர்ச்சையை விட்டு, முதற்பகுதியான விஷயத்திலேயே விமர்சம் யுக்தம். ஆனால், பிறர்க்கு முதற்பகுதியில் வாய்திறக்க லவலேசமும் இடமில்லாமையால் அதை அறவே விட்டிட்டு அச்சு ஸம்பந்தமான வார்த்தைகளையே திருப்பித் திருப்பி யெழுதிக் கொண்டிருக்க ப்ராப்தமாகும். அதில் பிறர் கூறுமதெல்லாம் ஸரி, ஸரி, ஸரி என்றே நாம் தலை துலுக்கி இசைந்து கொள்வதாக வைத்துக் கொள்ளுங்கள்.

104. "நானே தானாயிடுக" என்கிற சாஸ்த்ரமரியாதைக்காகவன்றிக்கே உண்மையாகவே இசைந்திடுகிறோ மென்றே கொள்க. ஆகவே இரண்டாவது பகுதியில் பிறர் கைசெலுத்த நினைப்பது வேண்டா. பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததுதான் என்பதை ஸ்தாபிக்க விருப்பமும் துணிவுமுண்டாகில் அதில் இறங்கி ப்ராமாணிகர்கள் உகக்க நிரூபணஞ் செய்து நம்மை அடிமைப் படுத்திக் கொள்வதே பாங்கு.

105. இந்நூலை நாம் ஸம்ப்ரதாயம் வல்ல ஸஹ்ருதயர்கள் பலர்க்கு அனுப்புகின்றோம். ஒவ்வொருவரும் பூர்த்தியாக வாசித்துப்பார்த்தும் ஆங்காங்கு ஒரு ஸதஸ்ஸு கூட்டி கோஷ்டியில் பலாறிய வாசித்துக்காட்டியும் அபிப்ராயம் தெரிவித்தருளவேணும். அநுகூலமாயிருந்தால் கொள்ளுவது ப்ரதிகூலமாயிருந்தால் தள்ளுவது என்றில்லாமல் எந்த அபிப்ராயமும் நம்மால் வரவேற்று வெளியிடப்படும். "பயங்கரருக்கு பயப்படாமல் தங்களுடைய அபிப்ராயங்களை வெளியிட......" என்று எழுதியுள்ளவர்களே பயப்படாமல் எழுதலாம்.

106. பயங்கரருக்கு பயப்படாமல் எழுதினவர்கள் ஒருவரிருவரல்லர்; பல நூற்றுவருளர். அப்படிப்பட்டவர்களைக் காட்டிலும் விசேஷமுடையவராகத் தம்மையபிமானித்திருக்கின்ற இந்த மஹான் சிறிதும் பயப்படாமல் தூஷணபரிஹாஸங்களை தூரத்தில் நிறுத்தித்தாம் கடைப்பிடித்த விஷயத்தை ஸப்ரமாணமாக மூதலித்தருள்க. அப்போது நாம் ப்ரதிவாதிபயங்கரத்வத்தை அறவே விட்டு ஸ்ரீவைஷ்ணவ தாஸ்யமொன்றையே பற்றிப் பரமானந்தமெய்துவோம். *

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியர்**
இயற்றிய
**ஆச்சான்பிள்ளை அஷ்டாத்யாயீ**
முற்றுப்பெற்றது.



ஸ்ரீ ஸுதர்சந பிரஸ், விஷ்ணு காஞ்சீ.

## ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபாவுக்கு 12—0—0 செலுத்திய மெம்பர்கள்.

55. T. C. A. ஸ்ரீநிவாஸவரதன், ஆகோலா.

56. ஏ. நாராயணையங்கார், புது டில்லி.

57. வானமாமலை வெங்கடரங்காசாரியர், மடுங்கா.

58. M. G. பார்த்தஸாரதி முதலியார், விருத்தாசலம்.

59. K. N. சேஷாத்ரி ஐயங்கார், அட்வொகேட் விருத்தாசலம்.

60 K. ஸந்தானமையங்கார், திருவல்லிக்கேணி.

61. T. S. N. ஸுந்தரராஜபாகவதர், பாண்டிச்சேரி.

62. M. V. பாஷியமையங்கார், டக்கன் ஹைதராபாத்.

## ஷை ஸபையில் லைப் மெம்பர் பதவியை ஏற்றுக்கொண்டவர்

S. S. P. ராகவாசாரியர், B.A., B.L., திருநெல்வேலி.

## ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைக்கு 4—0—0 சந்தா செலுத்தியவர்கள்

87. G. ரங்கய்ய நாயுடு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

88. T. M. ராமகிருஷ்ணய்யங்கார், சோழவந்தான்,

89. G. S. ஸுந்தரராஜ ஐயங்கார், கோபால ஸமுத்ரம்.

90. M. பொன்னுஸாமி ஐயங்கார், சொக்கலிங்கபுரம்.

91. V. K. ராஜகோபாலன், B.A., B.L., சித்தூர்.

92. செ. சி. நா. க. நா. நாராயணன் செட்டியார், கண்டரமாணிக்கம்.

93. ஜி. ஸுப்ரம்மணிய ஐயர், சித்தூர்.

94. S. ஸ்ரீநிவாஸய்யங்கார், அத்யாபகர் பிருந்தாவனம்.

